உ

காமாக்ஷ்யை நம:

मूककवि प्रणीत

# ॥ कटाक्ष शतकम् ॥

மஹாகவி மூக கவி
இயற்றிய

# கடாக்ஷ சதகம்.

(மூக பஞ்சசதியின் இரண்டாம் பாகம்)
மூலம் நாகரத்திலும் தமிழிலும்

'ஸௌந்தர்ய லஹரி' 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்'
இவற்றை மொழிபெயர்த்த
G V. கணேச அய்யர் B. A., B. L.,
எழுதிய
பதவுரை, விசேஷக் குறிப்புகளுடன் கூடியது



கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்தன ப்ரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்டில்
அச்சிடப்பட்டு, பிரசுரிக்கப்பட்டது.

விலை. 0—12—0

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:

# ‘மூக பஞ்ச சதீ’

## கடாக்ஷ சதகம்.

1 मोहान्धकारनिवहं विनिहन्तुमीडे
मूकात्मनामपि महाकवितावदान्यान् ।
श्रीकाञ्चिदेशशिशिरीकृतिजागरूका
नेकाम्रनाथतरुणीकरुणावलोकान् ॥

மோஹாந்தகார நிவஹம் விநிஹந்தும் ஈடே
மூகாத்மனும் அபி மஹாகவிதாவதான்யான்-
ஸ்ரீ காஞ்சிதேச சிசிரீக்ருதி ஜாகரூகான்
ஏகாம்ரநாத தருணீ கருணாவலோகான் ॥

மூகாத்மனும் அபி - ஊமையாயிருப்பவர்களுக்குக் கூட, மஹாகவிதா வதான்யான்-உயர்ந்த கவித்வ சக்தியைக் கொடுப்பதில் தாராளமான ஸ்வபாவத்தையுடையவைகளும், ஸ்ரீகாஞ்சிதேச-ஸ்ரீ காஞ்சிதேசத்தை, சிசிரீக்ருதி - குளிர்ச்சி செய்வதில் (ஸந்தோஷமடையச் செய்வதில்) ஜாகரூகான் - ச்ரத்தையுள்ளவைகளும், ஏகாம்ரநாத தருணீ - ஏகாம்ரநாதருடை பத்தினியான ஸ்ரீ காமாக்ஷியின், கருணாவலோகான் - கருணை நிறைந்த பார்வைகளை, மோஹாந்தகாரநிவஹம்-(என்னுடைய) மோஹமாகிற இருள் கூட்டத்தை, விநிஹந்தும் - போக்கடிப்பதற்கு வேண்டி, ஈடே - ஸ்தோத்ரம் செய்கிறேன்.

1. இதிலிருந்து இந்த சதகம் முழுவதிலும் கவியானவர் அம்பிகையின் கடாக்ஷத்தை (கடைக்கண் பார்வையை)வர்ணிக்கிறார்.

2. 'மூகாத்மகனுமபி.....வதான்யான்' என்பதில் கவியான வர் தன்னைப்பற்றிச் சொல்லிக்கொண்டதாகவும் சொல்லலாம்.

(1) ஊமையாயிருப்பவர்களுக்குக்கூட உயர்ந்த கவித்வ சக்தியைக் கொடுப்பதில் உதார ஸ்வபாவத்தை உடையவை களும்; ஸ்ரீ காஞ்சீ தேசத்தைக் குளிரச் செய்வதில் ச்ரத்தை யுள்ளவைகளுமான ஸ்ரீ ஏகாம்ரநாதனுடைய தேவியான ஸ்ரீ காமாக்ஷியினுடைய கருணை நிறைந்த கடாக்ஷங்களை என்னு டைய அக்ஞானமாகிய இருள் கூட்டத்தை விலக்கிக்கொள்ள வேண்டி, நான் ஸ்தோத்திரம் செய்கிறேன்.

2 मातर्जयन्ति ममताग्रहमोक्षणानि
माहेन्द्रनीलरुचिशिक्षणदक्षिणानि ।
कामाक्षि कल्पितजगत्त्रयरक्षणानि
त्वद्वीक्षणानि वरदानविचक्षणानि ॥

மாதர் ஜயந்தி மமதாக்ரஹமோக்ஷணானி
மாஹேந்த்ர நீல ருசி சிக்ஷண தக்ஷிணானி |
காமாக்ஷி கல்பித ஜகத்ரய ரக்ஷணானி
த்வத் வீக்ஷணானி வரதான விசக்ஷணானி ||

மாத: காமாக்ஷி - தாயே! காமாக்ஷி! மமதாக்ரஹ மோக்ஷ ணானி - மமதையாகிற பலமான பிடிப்பிலிருந்து விடுதலை செய் கிறவைகளும், மாஹேந்த்ர நீல ருசி - இந்த்ர நீலக்கல்லின் காந் தியை, சிக்ஷண தக்ஷிணானி-தோற்கடிப்பதில் ஸாமர்த்தியமுள்ள வைகளும், கல்பித ஜகத்ரய ரக்ஷணானி-மூன்று லோகங்களையும் காப்பாற்றுகிறவைகளும், வரதான விசக்ஷணானி - வரங்களைக் கொடுப்பதில் தேர்ந்தவைகளுமான, த்வத் வீக்ஷணானி-உன்னு டைய பார்வைகள், ஜயந்தி - விளங்கிக்கொண்டிருக்கின்றன.

(2) தாயே! ஸ்ரீ காமாக்ஷியே! அஹம்பாவமென்கிற பிடிப் பிலிருந்து விடுதலை செய்கிறவைகளும், இந்திர நீலக்கல்லின் காந்தியை அடக்குவதில் ஸாமர்த்தியமுள்ளவைகளும், மூன்று உலகங்களையும் ரக்ஷிப்பவைகளும் இஷ்டங்களைக் கொடுப்பதில் சக்தியுள்ளவைகளுமான உனது கடாக்ஷங்கள் உயர்ந்து விளங்குகின்றன.

3 आनङ्गतन्त्रविधिदर्शितकौशलाना-
मानन्दमन्दपरिघूर्णितमन्थराणाम् ।
तारल्यमम्ब तव ताडितकर्णसीम्नां
कामाक्षि खेलति कटाक्षनिरीक्षणानाम् ॥

ஆனங்க தந்த்ர விதி தர்சித கௌசலானாம்
ஆனந்த மந்த பரிகூர்ணித மந்தராணாம் |
தாரள்யம் அம்ப தவ தாடித கர்ணஸீம்னாம்
காமாக்ஷி கேலதி கடாக்ஷ நிரீக்ஷணானாம் ||

அம்ப காமாக்ஷி - தாயே! காமாக்ஷி! ஆனங்க தந்த்ர விதி- காம சாஸ்திர நியமங்களில், தர்சித கௌசலானாம்-காட்டப்பட்ட ஸாமர்த்தியத்தையுடையவைகளும், ஆனந்த மந்த பரிகூர்ணித - ஆனந்தத்தினால் மெதுவாக சுழல்வதை, மந்தராணாம் - காட்டுகிறவைகளும், தாடித கர்ணஸீம்னாம் -காதுவரையில் நீண்டிருப்பவைகளுமான, தவ கடாக்ஷ நிரீக்ஷணானாம்-உன் கடைக்கண் பார்வைகளுடைய, தாரள்யம் - தளதளப்பானது, கேலதி - விளையாடிக்கொண்டிருக்கிறது. (சோபிக்கிறது).

(3) அம்பிகையான ஸ்ரீ காமாக்ஷியே! காம சாஸ்திர நியமங்களில் ஸாமர்த்யத்தைக் காட்டுகிறவைகளும், ஸந்தோஷத்தினால் மெதுவாகச் சுழன்று கொண்டிருப்பவைகளும், காதுவரையில் நீண்டிருப்பவைகளுமான, உனது கடைக்கண் பார்வைகளுடைய தள தளப்பான காந்தியானது மிகவும் சோபித்துக் கொண்டிருக்கிறது.

4 कल्लोलितेन करुणारसवेल्लितेन
कल्माषितेन कमनीयमृदुस्मितेन ।
मामञ्चितेन तव किञ्चन कुञ्चितेन
कामाक्षि तेन शिशिरीकुरु वीक्षितेन ॥

கல்லோலிதேன கருணாரஸ வேல்லிதேன
கல்மாஷிதேன கமனீய ம்ருதுஸ்மிதேன |
மாம் அஞ்சிதேன தவ கிஞ்சன குஞ்சிதேன
காமாக்ஷி தேன சிசிரீகுரு வீக்ஷிதேன ||

காமாக்ஷி-ஹே காமாக்ஷி! கருணாரஸ வேல்லிதேன-கருணா ரஸத்தின் (அலைகளின்) அசைவினால், கல்லோலிதேன - கொந்தளித்ததாயும், கமனீய ம்ருதுஸ்மிதேன - அழகான மந்தஹாஸத்தினால், கல்மாஷிதேன-பலநிறத்தொடு கூடியதாகத்தோன்றுவதும், அஞ்சிதேன -வளைந்ததும், கிஞ்சன குஞ்சிதேனகொஞ்சம் குறுகியதுமான, தவ-உன்னுடைய, தேன வீக்ஷணேன - அப்பேர்ப்பட்ட பார்வையினால், மாம் சிசிரீகுரு - என்னைக்குளிரச் செய்.

1. கருணாரஸத்தை சிகப்பு நிறமாகவும், மந்தஸ்மிதத்தை வெளுப்பாகவும் வர்ணிப்பது வழக்கமாகையால் அவையிரண்டும் சேர்வதை இங்கு 'கல்மாஷிதம்' என்று சொல்லப்பட்டது.

2. அஞ்சிதம், குஞ்சிதம் இரண்டும் பார்வையானது வளைந்து குறுகியிருப்பதைக் குறிக்கும் பதங்கள்.

(4) ஹே! காமாக்ஷி! உனது கருணாரஸத்தின் அலையால் கொந்தளிப்பதாயும், அழகிய உனது மந்தஹாசத்தினால், பலவித வர்ணமுள்ளதுபோல் தோன்றுவதாயும், வளைந்ததும், சிறிது குறுகியதாயுமுள்ள உன்னுடைய அந்தகைய கடாக்ஷத்தினால் என்னைக் குளிரச் செய்வாயாக.

5 साहाय्यकं गतवती मुहुरर्जुनस्य
मन्दस्मितस्य परितोषितभीमचेताः ।
कामाक्षि पाण्डवचमूरिव तावकीना
कर्णान्तिकं चलति हन्त कटाक्षलक्ष्मीः ॥

ஸாஹாய்யகம் கதவதி முஹுரர்ஜுனஸ்ய
மந்தஸ்மிதஸ்ய பரிதோஷித பீம சேதா: |
காமாக்ஷி பாண்டவ சமூரிவ தாவகீனா
கர்ணாந்திகம் சலதி ஹந்த கடாக்ஷலக்ஷ்மீ: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தாவகீனா கடாக்ஷ லக்ஷ்மீ:- உன்னுடைய கடைக்கண் பார்வையானது, மந்தஸ்மிதஸ்ய அர்ஜுனஸ்ய - புன்சிரிப்போடுகூடிய அர்ஜுனனுக்கு, முஹு: ஸாஹாய்யகம் கதவதி - அடிக்கடி ஒத்தாசையை அடைவதா

யும், பரிதோஷித பீமசேதா: - பீமசேனனுடைய மனதை ஸந்தோஷப்படுத்துகிறதாயுமுள்ள, பாண்டவ சமூ: இவ - பாண்டவர்களுடைய ஸேனைமாதிரி, [அர்ஜுனஸ்ய மந்தஸ்மிதஸ்ய - வெளுப்பான புன்சிறிப்புனுடைய அடிக்கடி அடைவதாயும், பரிதோஷித பீம சேதா: - பரமசிவனுடைய மனதை ஸந்தோஷப்படச் செய்கிறதாயும் (இருந்து கொண்டு),] கர்ணாந்திகம் சலதி - கர்ணனுக்கு ஸமீபத்தில் செல்ல ஆரம்பிக்கிறது. (காதுக்கு ஸமீபத்தில் வருகிறது.) ஹந்த! ஆச்சர்யம்.

1. இதில் அம்பாளுடைய கடாக்ஷத்தை பாண்டவசேனைக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. அர்ஜுனமென்றால் வெளுப்பு என்று அர்த்தம். அதினாலேயே அர்ஜுனனுக்கு அம்மாதிரிப் பெயர் ஏற்பட்டது. பீமனென்பது பீமஸேனனைக் குறிப்பதும் தவிர பரமசிவனுடைய அஷ்டமூர்த்திகளில் ஒரு மூர்த்திக்கும் பெயர். கர்ணமென்பது கர்ணனைக் குறிப்பதுடன் காதையும் குறிக்கும்.

2. புன்சிறிப்பை வெளுப்பாகச் சொல்வது வழக்கம். அதனால் தான் இங்கு 'அர்ஜுனஸ்ய மந்தஸ்மிதஸ்ய' என்று சொல்லப்பட்டது.

3. அர்ஜுனன் வீரர்களில் ச்ரேஷ்டமானவனுகையால் அவன் புன்சிரிப்புடன் யுத்தம் செய்வதாக 'மந்தஸ்மிதஸ்ய அர்ஜுனஸ்ய' என்று சொல்லப்பட்டது.

4. உத்தம ஸ்திரீகளுடைய கண்கள் காதுவரையில் நீண்டிருப்பதாக வர்ணிக்கப்படுவதை அநுஸரித்து 'கர்ணாந்திகம் சலதி' என்று சொல்லப்பட்டது. கர்ணன் பாண்டவர்களுக்கு எதிர் கக்ஷியைச் சேர்ந்தவனுகையால் அவனோடு யுத்தம் செய்ய பாண்டவ ஸேனை போவதை 'கர்ணாந்திகம் சலதி' என்று சொல்லப்பட்டது.

[5) ஹே! காமாக்ஷி! உன்னுடைய கடைக்கண் பார்வையான லக்ஷ்மீயானது வெளுப்பான மந்தஸ்மிதமாகிற அர்ஜுனனுக்கு அடிக்கடி உதவி அடைவதாயும், பீமனென்கிற மூர்த்தியான பரமசிவனுடைய மனத்தை சந்தோஷிக்கச் செய்வதாயும் பாண்டவ ஸேனையைப்போல் இருந்துகொண்டு கர்ணத்தின் ஸமீபத்திற்குச் செல்லுகிறது.

6 अस्तं क्षणान्नयतु मे परितापसूर्य-
मानन्दचन्द्रमसमानयतां प्रकाशम् ।
कालान्धकारसुषमां कलयन्दिगन्ते
कामाक्षि कोमलकटाक्षनिशागमस्ते ॥

அஸ்தம் க்ஷணான்னயது மே பரிதாபஸூர்யம்
ஆனந்த சந்த்ரமஸம் ஆனயதாம் ப்ரகாசம் ।
காலாந்தகார ஸுஷமாம் கலயன் திகந்தே
காமாக்ஷி கோமள கடாக்ஷ நிசாகமஸ்தே ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷியே ! தே - உன்னுடைய, கோமள கடாக்ஷ நிசாகம:- அழகான கடாக்ஷமாகிற ஸாயங் காலமானது, திகந்தே - எல்லா திக்குகளிலும், காலாந்தகார ஸுஷமாம் - கருத்ததான இருட்டின் அழகை, கலயன்-உண்டு பண்ணிக்கொண்டு, மே பரிதாபஸூர்யம் - என்னுடைய பரிதா பமாகிற ஸூர்யனை, க்ஷணத் அஸ்தம் நயது - ஒரு க்ஷணத்தில் அஸ்தமிக்கச் செய்யட்டும், ஆனந்த சந்த்ரமஸம் - ஆனந்த மாகிற சந்திரனை, ப்ரகாசம் ஆனயதாம்-வெளிவரச் செய்யட்டும்.

(6) ஹே! காமாக்ஷி! உன்னுடைய அழகிய கடாக்ஷ மாகிற ஸாயங்கால வேளையானது, திக்குகளில் கருத்த இருட் டின் காந்தியை உண்டுபண்ணிக்கொண்டு, என்னுடைய பரிதாப மாகிற ஸூர்யனை ஒரு க்ஷணத்தில் அஸ்தமிக்கச் செய்யட்டும். ஆனந்தமாகிற சந்திரனை பிரகாசமாகும்படி செய்யட்டும்.

7 ताटङ्कमौक्तिकरुचाङ्कुरदन्तकान्तिः
कारुण्यहस्तिपशिखामणिनाधिरूढः ।
उन्मूलयत्वशुभपादपमस्मदीयम्
कामाक्षि तावककटाक्षमतङ्गजेन्द्रः ॥

தாடங்க மௌக்திக ருசாங்குர தந்த காந்தி:
காருண்ய ஹஸ்திப சிகாமணினாதிரூட: ।
உன்மூலயத்வசுப பாதபம் அஸ்மதீயம்
காமாக்ஷி தாவக கடாக்ஷ மதங்கஜேந்த்ர: ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தாடங்க மௌக்திக - தாடங்கத்திலிருக்கும் முத்துக்களுடைய, ருசாங்குர தந்தகாந்தி - ப்ரகாசமாகிய வேருடுகூடிய தந்தங்களுடைய காந்தியோடும், காருண்ய - கருணையாகிற, ஹஸ்திப சிரோமணிநா-உத்தமமான மாவுத்தனால், அதிருட: - ஏற்பட்டதுமான (நடத்தப்பட்டதுமான) தாவக - உன்னுடைய கடாக்ஷ மதங்கஜேந்த்ர: - கடாக்ஷமாகிற கஜச்ரேஷ்டமானது: அஸ்மதீயம் - நம்முடைய அசுப பாதபம் - அசுபமாகிற வ்ருக்ஷத்தை, உன்மூலயது - வேரோடு களைந்து எறியட்டும்.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை யானைக்குலமானமாக வர்ணிக்கப்பட்டது. மதங்கமென்றாலும் மதங்கஜமென்றாலும் யானைக்குப் பெயர்.

2. அவ்விதமான யானையினுடைய தந்தங்களின் காந்தியாக அம்பிகை காதுகளில் தரித்திருக்கும் தாடங்கங்களுடைய முத்துக்களின் ப்ரகாசத்தைச் சொல்லப்பட்டது.

3. அம்பிகையின் காருண்யத்தினால் கடாக்ஷமானது (பிறரிடம்) ஏற்படுவதால் அதை அவ்வித கடாக்ஷமான யானைக்கு மாவுத்தனாகச் சொல்லப்பட்டது.

4. மரங்களைப்பிடுங்கி எறிவதானது யானைகளுக்கு ஒரு விளையாட்டாகச் சொல்லப்படும். இங்கு அம்பிகையின்கடாக்ஷமாகிற யானையானது பக்தர்களுடைய அசுபமாகிற மரத்தைப் பிடுங்கி வேருடு களைந்துவிடுவதாகச் சொல்லப்பட்டது. (அசுபமென்றால் சுபமல்லாதது-கெடுதல், கஷ்டம் துரத்ருஷ்டம் முதலியவை.)

(7) ஹே! காமாக்ஷி! உனது காதுத் தோடுகளிலுள்ள முத்துக்களுடைய காந்தியால் தந்தத்தின் சோபையை அடைந்ததும், காருண்யமென்ற உத்தம மாவுத்தனால் ஏறிக்கொள்ளப்பட்டதுமான உன்னுடைய கடாக்ஷமென்கிற யானை சிரேஷ்டமானது, எங்களுடைய பாபமாகிற விருக்ஷத்தை வேருடன் களைந்து எறியட்டும்.

8 छायाभरेण जगतां परितापहारी
ताटङ्करत्नमणितल्लजपल्लवश्रीः ।
कारुण्यनाम विकिरन्मकरन्दजालं
कामाक्षि राजति कटाक्षसुरद्रुमस्ते ॥

ச்சாயாபரேண ஜகதாம் பரிதாபஹாரீ
தாடங்கரத்ன மணிதல்லஜ பல்லவஶ்ரீ: ।
காருண்யநாம விகிரன் மகரந்த ஜாலம்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷ ஸுரத்ருமஸ்தே ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷியே! தே கடாக்ஷஸுரத்ரும: - உன்னுடைய கடாக்ஷமாகிற கல்பவ்ருக்ஷமானது, சாயாபரேண - தன்னுடைய அதிகமான நிழலினால்: ஜகதாம் பரிதாபஹாரீ - லோகங்களுடைய தாபத்தைப் போக்குகிறதாயும், தாடங்க ரத்னமணி - தாடங்கத்தின் ரத்னக் கல்லுகளாகிய, தல்லஜ பல்லவஶ்ரீ: - உயர்ந்த துளிர்களின் அழகையுடையதாயும், காருண்யநாம - காருண்யமென்கிற, மகரந்தஜாலம் - பூந்தேனின் ப்ரவாஹத்தை, விகிரன்-பெருகவிட்டுக்கொண்டும், ராஜதி - விளங்குகிறது.

இதில் அம்பாளுடைய கடாக்ஷத்தை தேவலோகத்திய வ்ருக்ஷத்திற்கு ஸமமாக வர்ணிக்கப்பட்டது. அவ்வித வ்ருக்ஷங்கள் மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பவ்ருக்ஷம், ஹரிசந்தனம் என்ற ஐந்து.

(8) காமாக்ஷியே! உன்னுடைய கடாக்ஷமாகிற கல்பக விருக்ஷமானது, தனது நிழலினால் உலகங்களுடைய தாபத்தைப் போக்குகிறதாயும், காதுத் தோடுகளிலுள்ள ரத்ந ஸிரேஷ்டங்களால், துளிர் நிறைந்ததுபோன்ற சோபையையுடையதாயும், காருண்யமென்கிற தேன் குவியலை வர்ஷித்துக்கொண்டிருப்பதாயும் விளங்குகிறது.

9 सूर्याश्रय प्रणयिनी मणिकुण्डलांशु
लौहित्यकोकनदकाननमाननीया ।
यान्ती तव स्मरहराननकान्ति सिन्धुं
कामाक्षि राजति कटाक्षकलिन्दकन्या ॥

ஸவிர்யாச்ரய ப்ரணயினீ மணிகுண்டலாம்சு
லௌஹித்ய கோகனத கானன மானனீயா ।
யாந்தி தவ ஸ்மரஹரானன காந்திஸிந்தும்
காமாக்ஷி ராஜதி கடாக்ஷகளிந்த கன்யா ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தவ கடாக்ஷகளிந்த கன்யா - உன்னுடைய கடாக்ஷமாகிற யமுனா நதியானது, ஸவிர்யாச்ரய, ப்ரணயினீ-ஸவிர்யனை (பரமசிவனை) ஆச்ரயிப்பதில் ஆசையுள்ளதாயும், மணிகுண்டலாம்சு-ரத்னகுண்டலங்களின் காந்திகளாகிற, லௌஹித்ய கோகனத கானன-செந்தாமரைகளின் வர்ணத்தால், மானனீயா-கௌரவிக்கத்தக்கதாயிருந்துகொண்டு, ஸ்மரஹரானன காந்தி ஸிந்தும்-பரமசிவனுடைய முகத்தின் காந்தியாகிற ஸமுத்ரத்தை, யாந்தீ-அடைவதாக(அடைந்துகொண்டு) ராஜதி - விளங்குகிறது.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை யமுனா நதிக்கு ஸமமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. களிந்தமென்று பெயருடைய பர்வதத்திலிருந்து யமுனையானது உத்பத்தியாவதால் அதற்கு காளிந்தி, "களிந்தகன்யா என்பதான பெயர்கள் ஏற்பட்டன.

2. ஸவிர்யனுக்கு யமன் புத்ரனாகவும், யமுனை புத்ரியாகவும் சொல்லப்படுவார்கள்.

3. ஸவிர்யனென்று சிவனுக்கும் பெயருண்டு.

(9) காமாக்ஷியே! உனது கடாக்ஷமாகிற யமுனா நதியானது, ஸவிர்யனை ஆச்ரயிப்பதில் ஆசையுள்ளதாயும், சிவந்த ரத்தகுண்டலங்களின் காந்தியால், செந்தாமரைக் கூட்டம் உள்ளதுபோல் கொண்டாடத் தக்கதாயும், மன்மத சத்ருவான பரமசிவனின் முககாந்தியாகிற ஸமுத்ரத்தை அடைகிறதாயும் விளங்குகிறது.

10 प्राप्नोति यं सुकृतिनं तव पक्षपाता-
त्कामाक्षि वीक्षणविलासकलापुरंध्री ।
सद्यस्तमेव किल मुक्तिवधूर्वृणीते
तस्मान्नितान्तमनयोरिदमैकमत्यम् ॥

ப்ராப்னோதி யம் ஸு்க்ருதினம் தவ பக்ஷபாதாத்
காமாக்ஷி வீக்ஷணவிலாஸகலா புரந்த்ரீ |
ஸத்யஸ்தமேவ நில முக்திவதூர் வ்ருணீதே
தஸ்மான் நிதாந்தம் அனயோரிதம் ஐகமத்
யம் ||

காமாக்ஷி-ஹே காமாக்ஷி! தவ பக்ஷபாதாத் - உன்னுடைய கடாக்ஷத்திலிருந்து. வீக்ஷண விலாஸகலா-(உன்னுடைய)பார் வையினுடைய அழகின் ஒரு சிறிய பாகமாகிற, புரந்த்ரீ-குடும்ப ஸ்த்ரீயானவள், யம் ஸு்க்ருதினம் - எந்த புண்யசாலியை, ப்ரா ப்னோதி-அடைகிறளோ. ஸத்ய:- உடனே, தமேவ - அவனையே முக்திவது: - மோக்ஷமாகிற ஸ்திரீயானவள், வ்ருணீதே கில வரிக்கிறாள் அல்லவா! தஸ்மாத்-அதிலிருந்து, அனயோ: - அவ் விரு ஸ்த்ரீகளுக்கும், இதம் ஐகமத்யம்-இவ்விதமான ஒற்றுமை யானது: நிதாந்தம் - மிகவும் அதிகமாக (இருக்கிறது).

இதின் தாத்பர்யமென்றால் - அம்பிகையின் க்ருபையினால் அவளுடைய கடாக்ஷலேசமானது ஒருவன்மீது ஏற்பட்டால் அவனுக்கு ஐஹிகமான ஸகல ஸௌபாக்யங்களுமேற்படு வதுடன் ஆமுஷ்மிகமான மோக்ஷமென்கிற புருஷார்த்தமும் தானகவே கிடைக்கிறதென்று சொல்லப்பட்டது. ஸாதாரண மாக, போகம் இருக்குமிடத்தில் மோக்ஷம் கிடைக்காதென் றும், மோக்ஷமிருக்குமிடத்தில் போகம் கிடையாதென்றும் நாம் பார்ப்பது வழக்கமாயிருக்கையில், அம்பிகையின் பக்தர்களுக்கு அவையிரண்டும் ஒருங்கே கிடைக்கப்பெறுமென்று சொல்லப் படும்.

'யத்ராஸ்தி போகோ ந து தத்ரமோக்ஷ:
யத்ராஸ்தி மோக்ஷோ ந ச தத்ரபோக: |
ஸ்ரீ ஸு்ந்தரீ ஸாதக புங்கவானும்
போகச்ச மோக்ஷச்ச கரஸ்த்த ஏவ ||'

(10) ஹே! காமாக்ஷி! எந்த புண்யசாலியை உன்னுடைய கடாக்ஷ விலாஸமாகிற குலஸ்திரீயானவள் ப்ரீதியினால் அடை கிறளோ, அந்த மனிதனையே, முக்தி என்ற ஸ்திரீயும் உடனே வரிக்கிறாள். இந்த இருஸ்திரீகளுக்கும் மிகவும் ஒற்றுமை இருக்கிறது.

11 यान्ती सदैव मरुतामनुकूलभावं
भ्रूवल्लिशक्रधनुरुल्लसिता रसार्द्रा ।
कामाक्षि कौतुकतरङ्गितनीलकण्ठा
कादम्बिनीव तव भाति कटाक्षमाला ॥

யாந்தி ஸதைவ மருதாம் அநுகூலபாவம்
ப்ரூவல்லி சக்ரதநுருல்லஸிதா ரஸார்த்ரா I
காமாக்ஷி கௌதுக தரங்கித நீலகண்டா
காதம்பினீவ தவ பாதி கடாக்ஷமாலா II

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தவ கடாக்ஷமாலா - உன்னுடைய கடாக்ஷங்களின் வரிசையானது, காதம்பினீவ - மேகங்களின் நீண்டதோர் வரிசைபோல், ஸதைவ - எப்போதும், மருதாம் அநுகூலபாவம் - காற்றுகளுடைய (தேவர்களுடைய) அநுகூலமான தன்மையை, ப்ரூவல்லி - புருவமாகிய, சக்ரதநுருல்லஸிதா - வான வில்லினால் ப்ரகாசிப்பதாயும், ரஸார்த்ரா- நீர் (கருணாரஸம்) நிறைந்ததாயும், கௌதுக தரங்கித - ஸந்தோஷத்தினால் அலைபாயும் மனதுடைய, நீலகண்டா - மயிலை (பரமசிவனை) யுடையதாயும், பாதி - விளங்குகிறது.

இதில் அம்பிகையின் கடாக்ஷங்களான மாலையை காதம்பினிக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. வரிசையாய் இருக்கும் மேகக் கூட்டத்திற்கு காதம்பினீ என்று பெயர். காற்றானது அநுகூலமாய் இருந்தால்தான் அவ்வித சேர்க்கையானது கலைபடாமலிருக்குமாகையால் 'மருதாம் அநுகூலபாவம் யாந்தீ' என்று சொல்லப்பட்டது. மருத் என்ற பதமானது தேவ விசேஷங்களையும் குறிக்கும். மேகத்தில் இந்த்ர தனுஸ் இருப்பதுபோல் கடாக்ஷமாலைக்கு அம்பிகையின் புருவங்களாகிய தனுஸ் இருப்பதை 'ப்ரூவல்லிசக்ரதநுருல்லஸிதா' என்று சொல்லப்பட்டது. புருவங்களின் அமைப்பை வில்லுக்கு ஸமமாக வர்ணிப்பது வழக்கம். மேகம் நீருண்டிருப்பது மாதிரி கடாக்ஷமாலையானது கருணாரஸம் நிறைந்திருக்கிறது. (ரஸம் என்றால் ஜலமென்றும் அர்த்தம்.) நீருண்ட மேகத்தைக்கண்டு மயில்கள் நர்த்தனம் செய்யுமென்று சொல்வது வழக்கம். (மயிலுக்கு நீலகண்டமென்று பெயர்). நீலகண்டமென்று பரமசிவ

னுக்கும் பெயராகையாலும், அவருடைய மனதானது அம்பிகையின் கடாக்ஷ மாலையைப் பார்த்து ஆனந்தமடையுமாகையால் 'கௌதுக தரங்கித நீலகண்டா' என்று சொல்லப்பட்டது.

(11) காமாக்ஷி! உனது கடாக்ஷ வரிசையாகிற மேகக் கூட்டமானது மருத்துக்களுக்கு அதாவது காற்றுக்கும், தேவர்களுக்கும் எப்போதும் அநுகூலமாயிருப்பதாகவும், உனது புருவக்கொடியினால், வானவில்லின் சோபை போல் விளங்குவதாயும், கருணையாகிற ரஸத்தால் (ஜலத்தினால்) நனைந்ததாயும் நீலகண்டனுக்கு (சிவன், மயில்) ஸந்தோஷமாகிற அலையை விருத்தி செய்கிறதாயும் விளங்குகிறது.

12 गङ्गाम्भसि स्मितमये तपनात्मजेव
गङ्गाधरोरसि नवोत्पलमालिकेव ।
वक्त्रप्रभासरसि शैवलमण्डलीव
कामाक्षि राजति कटाक्षरुचिच्छटा ते ॥

கங்காம்பஸி ஸ்மிதமயே தபனாத்மஜேவ
கங்காதரோரஸி நவோத்பல மாலிகேவ |
வக்த்ர ப்ரபாஸரஸி சைவல மண்டலீவ
காமாக்ஷி ராஜதி கடாக்ஷ ருசிச்சடா தே ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே கடாக்ஷ ருசிச்சடா - உன்னுடைய, கடாக்ஷத்தின் காந்திகளுடைய கூட்டமானது, ஸ்மிதமயே - (உன்னுடைய) புன்சிரிப்பாகிற, கங்காம்பஸி - கங்கா ஜலத்தில், தபனாத்மஜேவ - யமுனா நதிபோலும், கங்காதரோரஸி - பரமசிவனுடைய மார்பில், நவோத்பல மாலிகேவ - புதிதான கருநெய்தல் புஷ்பங்களின் மாலைபோலும், வக்த்ரப்ரபாஸரஸி - (உன்னுடைய) முக காந்தியாகிற ஸரஸில், சைவல மண்டலீவ - பாசிக்கூட்டம்போலும், ராஜதி - விளங்குகிறது.

1. கங்காஜலமானது வெளுப்பாகவும், யமுனா நதியின் ஜலம் கருப்பாகவும் இருப்பதாகச் சொல்லப்படும். புன்சிரிப்பை வெளுப்பாகச் சொல்லப்படும். பரமசிவனுடைய சரீரமானது வெளுப்புநிறமாகச் சொல்லப்படும்.

2, தபனென்று ஸூர்யனுக்குப்பெயராகையால் அவனு டைய பெண்ணை யமுனைக்கு தபனத்மஜா, தபன தனயா என்ற பெயர்கள் உண்டு.

3. கடாக்ஷத்தின் காந்தியினுடைய கூட்டமான சேர்க் கையானது கருப்பு நிறமாய் இருப்பதாகஇங்கு வர்ணிக்கப் பட்டது.

(12) காமாக்ஷியே! உனது கடாக்ஷ சோபையின் கூட்ட மானது, உன்னுடைய புன்சிரிப்பாகிய கங்கா ஜலத்தில் யமுனை கலந்ததுபோலவும், பரமசிவனின் மார்... புதிய நீலோத்பல புஷ்ப மாலைபோலவும், உனது முக கமல... கிற தடாகத்தில் பாசிக்கொத்துபோன்றும் பிரகாசிக்கிறது.

13 संस्कारतः किमपि कन्दलितान्रसज्ञा-
केदारसीम्नि सुधियामुपभोगभाग्यान् ।
कल्याणसूक्तिलहरीकलमाङ्कुरान्नः
कामाक्षि कन्दलयतु त्वदपाङ्गमेघः ॥

ஸம்ஸ்காரத: கிமபி கந்தலிதான் ரஸக்ஞா-
கேதாரஸீம்னி ஸுதியாம் உபபோகபாக்யான் |
கல்யாண ஸூக்தி லஹரீ கலமாங்குரான் ந:
காமாக்ஷி கந்தலயது த்வத் அபாங்க மேக: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! த்வத் அபாங்க மேக:-உனது கடைக்கண் பார்வையென்ற மேகமானது, ந: - நம்முடைய, ரஸக்ஞாகேதாரஸீம்னி - நாக்காகிற வயலில், ஸம்ஸ்காரத: - செய் நேர்த்தியால், கிமபி கந்தலிதான் - ஒருவிதமாய் (கொஞ் சம்) கிளம்பியிருப்பதும், ஸுதியாம் - (புத்திமான்களுடைய) புத்திமான்களால், உபபோக பாக்யான் - அநுபவிக்கத் தக்கதா யுமுள்ள, கல்யாணஸூக்தி லஹரீ - மங்கலகரமான வாக்குக ளின்பெருக்காகிற, கலமாங்குரான் - சம்பாப் பயிர்களை, கந்தல யது - செழுமையாய் வளரச் செய்யட்டும்.

இதில், பக்தர்களுடைய நாக்காகிற வயலில் சிறந்த வாக்குகளாகிற பயிர்களை செழுமையாய் வளரச் செய்யும்

நீருண்ட மேகத்திற்கு ஒப்பிடப்பட்டது. அதாவது, அம்பிகை யின் கடாக்ஷமானது கிடைக்கப் பெற்ற ஒருதனுக்கு ச்ரேஷ்ட மான கவிதா சக்தி ஏற்படுமென்பது தாத்பர்யம்.

(13) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற மேகமானது என்னுடைய நாக்கு என்கிற வயலில் நல்ல செய் நேர்த்தியால் மூளைத்தவைகளும், புத்திமான்களுக்கு அனுபவிக்கத் தக்க வைகளுமாகிய மங்களகரமான வாக்ஜரி (கவிதசக்தி), யாகிற சம்பாப் பயிர்களை விருத்தி செய்யட்டும்.

14 चाञ्चल्यमेव नियतं कलयन्प्रकृत्या
मालिन्यभूः श्रुतिपथाक्रमजागरूकः ।
कैवल्यमेव किमु कल्पयते नतानां
कामाक्षि चित्रमपि ते करुणाकटाक्षः ॥

சாஞ்சல்யமேவ நியதம் கலயன் ப்ரக்ருத்யா
மாலின்யபூ: ச்ருதிபதாக்ரமஜாகருக: |
கைவல்யமேவ கிமு கல்பயதே நதானாம்
காமாக்ஷி சித்ரமபி தே கருணா கடாக்ஷ: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே கருணா கடாக்ஷ:- உன்னு டைய கருணை நிறைந்த கடாக்ஷமானது, ப்ரக்ருத்யா - இயற்கை யாகவே, நியதம் - எப்போதும், சாஞ்சல்யமேவ கலயன் - சஞ் சல ஸ்வபாவத்தோடே இருந்தும், நதானாம் - நமஸ்கரித்த பக்தர்களுக்கு, மாலின்யபூ: - அழுக்கு (அதாவது, பாபம்) நிறைந்த பூமியாகிற ஸம்ஸாரத்தை, ச்ருதி பதாக்கிரம ஜாகருக:- வேதங்களாகிய மார்க்கத்தின் வழியாய் (அவர்கள்) கடப்பதில் அக்கரையுள்ளதாய், சித்ரம் அபி - ஆச்சர்யப்படத்தக்கவிதமாய் கைவல்யமேவ - கைவல்ய மோக்ஷத்தையே, கிமு கல்பயதே - எப்படி உண்டுபண்ணுகிறது!

(14) ஹே! காமாக்ஷி! உனது கருணை நிறைந்த கடாக்ஷ மானது இயற்கையாகவே எப்போதும் சஞ்சல ஸ்வபாவத்தோடு இருந்தும், நமஸ்கரித்த பக்தர்களுக்கு பாபம் நிறைந்த பூமி யாகிற ஸம்ஸாரத்தை, வேதங்களாகிற வழியின் மூலமாகத்

தாண்டுவதில் சிரத்தையுள்ளதாய், ஆச்சர்யப்படத் தக்க விதமாய் மோக்ஷத்தையே எப்படி உண்டுபண்ணுகிறது ? ஆச்சர்யம்!!

15 संजीवने जननि चूतशिलीमुखस्य
संमोहने शशिकिशोरकशेखरस्य।
संस्तम्भने च ममताग्रहचेष्टितस्य
कामाक्षि वीक्षणकला परमौषधं ते॥

ஸஞ்ஜீவனே ஜனனி சூதசிலீ முகஸ்ய
ஸம்மோஹனே சசி கிசோரக சேகரஸ்ய ।
ஸம்ஸ்தம்பனே ச மமதாக்ரஹ சேஷ்டிதஸ்ய
காமாக்ஷி வீக்ஷணகலா பரமௌஷதம் தே ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே வீக்ஷணகலா - உனது பார்வையின் அம்சமானது, சூத சிலீமுகஸ்ய - (மாம்பூவை பாணமாகவுடைய) மன்மதனுக்கு, ஸஞ்ஜீவனே - பிழைப்பு மூட்டுவதிலும், சசி கிசோரக சேகரஸ்ய - (சந்த்ரனுடைய கலையை சிரோபூஷணமாயுடைய) பரமசிவனுக்கு, ஸம்மோஹனே நன்றாய் மோஹம் உண்டாக்குவதிலும், மமதாக்ரஹ சேஷ்டிதஸ்ய-மமதையாகிய ஆவேசத்தினுடைய சேஷ்டைக்கு, ஸம்ஸ்தம்பனே - அடியோடு நிறுத்துவதிலும், பரமௌஷதம்-ச்ரேஷ்டமான ஔஷதமாயிருக்கிறது.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை ஒரு சிறந்த ஔஷதமாகச் சொல்லப்பட்டது. அதினுடைய உயர்ந்த குணமானது இதில் வர்ணிக்கப்பட்டபடி ஸஞ்ஜீவனம், ஸம்மோஹனம், ஸம்ஸ்தம்பனம் முதலியவற்றால் வெளியாகிறது.

2. ஸஞ்ஜீவன சக்தியானது இதேமாதிரி

'ஹரநேத்ராக்னிஸந்தக்த காமஸஞ்ஜீவனௌஷதி: ',
என்பதாக 'ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம'த்திலும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

(15) ஹே! காமாக்ஷி! கடாக்ஷப்பார்வையான கலையானது மாம்பூவை பாணமாக உடைய மன்மதனை பிழைப்புமூட்டு

வதிலும், சந்திர கலையை சிரோபூஷணமாகக்கொண்ட பரம சிவனை மோகிக்கச் செய்வதிலும், அஹங்கார மென்கிற பூதத் தின் சேஷ்டையை ஸ்தம்பனம் செய்வதிலும், உத்தமமான ஔஷதமாகயிருக்கிறது.

16 नीलोऽपि रागमधिकं जनयन्पुरारे-
लोलोऽपि भक्तिमधिकां द्रढयन्नराणां ।
वक्रोऽपि देवि नमतां समतां वितन्व-
न्कामाक्षि नृत्यतु मयि त्वदपाङ्गपातः ॥

நீலோऽபி ராகம் அதிகம் ஜனயன் புராரே:
லோலோऽபி பக்திம் அதிகாம் த்ருடயன்
[நராணாம் |
வக்ரோऽபி தேவி நமதாம் ஸமதாம் விதன்வன்
காமாக்ஷி ந்ருத்யது மயித்வத் அபாங்கபாத: ||

தேவி காமாக்ஷி - ஹே தேவி! காமாக்ஷி!, த்வத் அபாங்கபாத - உனது கடைக்கண் பார்வையானது: நீலோऽபி- தான் கருத்திருந்தாலும்: புராரே: - பரமசிவனுக்கு, அதிகம் ராகம் ஜனயன் - அதிகமான ராகத்தை உண்டுபண்ணுகிற தாயும், லோலோऽபி - தான் சஞ்சலிப்பதாயிருந்தாலும், நராணாம் - ஜனங்களுக்கு (பக்தர்களுக்கு), அதிகாம் பக்திம் த்ருடயன் - அதிகமான பக்தியை உறுதிப்படுகிறதாயும், நமதாம் -நமஸ்கரிக்கும் பக்தர்களுக்கு, ஸமதாம் விதன்வன்- ஸமமாய் (ஒழுங்காய்)இருக்கும் தன்மையை உண்டுபண்ணுவதாயும், மயி -என்னிடத்தில், ந்ருத்யது - நர்த்தனம் செய்துகொண்டிருக் கட்டும்.

1. கடாக்ஷமானது கருப்பாயிருப்பதாய்ச் சொல்லப் படும். ராகமென்பது பொதுவாக வர்ணத்தைக்குறிக்கும். ராக மென்றால் ஆசையென்றும் அர்த்தம். ஆசையை (பற்றுதலை) சிகப்புநிறமாக வர்ணிப்பது வழக்கம்: அம்பிகையின் கடாக்ஷ மானது பரமசிவனுடைய மனதில் ஆசையை அதிகரிக்கச் செய் வதால், தான் நீலநிறமாயிருந்தும் அவரிடத்தில் ராகத்தை (சிகப்பு நிறத்தை) உண்டுபண்ணுவதாகச்சொல்லப்பட்டது.

2. அதே விதமாக, தான் சஞ்சலமாயிருந்தாலும் ஜனங்களுடைய பக்தியை கெட்டிப்படுத்துவதாயும், தான்வக்ரமாயிருந்தாலும் பக்தர்களுக்கு ருஜுபாவத்தைக் கொடுப்பதாயும் சொல்லப்பட்டது.

3. இவ்விதம் தனக்கிருக்கும் ஸ்வபாவமான குணங்களுக்கு விரோதமான செய்கைகளோடிருப்பது போல் சொல்லி அம்பிகையின் கடாக்ஷத்தின் மேன்மையை வர்ணித்திருக்கிறார்.

(16) ஹே! காமாக்ஷி தேவியே! உனது கடாக்ஷத்தின் பார்வையானது, கருத்ததாயிருப்பினும், புராரியான பரமசிவனுக்கு அதிகமான ராகத்தை (சிவப்பை, ஆசையை)க் கொடுப்பதாயிருக்கிறது. கடாக்ஷமானது சஞ்சலமாயிருந்தும் பக்தர்களான மனிதர்களுடைய பக்தியை அதிகமாகும்படி உறுதிப்படுத்துகிறது. கடாக்ஷமானது வக்ரமாயிருப்பினும், ஸேவார்த்திகளுக்கு ஸமத்வத்தைக் கொடுப்பதாயிருக்கிறது. அத்தகைய கடாக்ஷமானது என்னிடத்தில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கவேணும்.

17 कामद्रुहो हृदययन्त्रण जागरूका
कामाक्षि चञ्चलदृगञ्चलमेखला ते ।
आश्चर्यमम्ब भजतां झटिति स्वकीय-
संपर्क एव विधुनोति समस्तबन्धान् ॥

காமத்ருஹோ ஹ்ருதய யந்த்ரண ஜாகரூகா
காமாக்ஷி சஞ்சல த்ருகஞ்சல மேகலா தே |
ஆச்சர்யம் அம்ப பஜதாம் ஜடிதி ஸ்வகீய
ஸம்பர்க்க ஏவ விதுனோதி ஸமஸ்த பந்தான் ||

காமாக்ஷி அம்ப-ஹே காமாக்ஷி! தாயே!, காமத்ருஹ:-பரமசிவனுடைய, ஹ்ருதய யந்த்ரண - மனதைக் கட்டுவதில், ஜாகரூகா - ஜாக்ரதை (அக்கரை) யோடிருக்கும், தே - உன்னுடைய, சஞ்சல த்ருகஞ்சல - சஞ்சலமான பார்வையென்ற, மேகலா - சரடானது, ஸ்வகீய ஸம்பர்க்க ஏவ - தனது ஸம்பந்தம் ஏற்பட்டமாத்திரத்திலேயே, பஜதாம்-பக்தர்களுடைய,

ஸமஸ்த பந்தான் - ஸகல விதமான பந்தங்களையும், ஜடிதி- சீக்கிரத்தில் (உடனேயே), விதுனோதி-போக்கடித்துவிடுகிறது, ஆச்சர்யம் - இது ஆச்சர்யம்!

இதில் அம்பிகையின் கடாக்ஷத்திற்கிருக்கும் பந்தன சக்தியையும் பந்தமோசன சக்தியையும் சொல்லப்பட்டது. மன்மதனுக்கும் வசப்படாத பரமசிவனைக்கூட கட்டிவிட சக்தியுடைய அம்பிகையின் கடாக்ஷமானது பக்தர்களுக்கிருக்கும் எல்லாவிதமான ஸம்ஸார பந்தங்களையும் போக்கடிக்கும் ஸாமர்த்யமுடையதாயிருக்கிறது. இவ்விதம் அதற்குள்ள ஆச்சர்யகரமான சக்தியை இங்கு வர்ணிக்கப்பட்டது.

(17) ஹே! அம்பிகையே! காமாக்ஷியே உன்னுடைய சஞ்சலமான கடாக்ஷமென்கிற கயிறானது, பரமசிவனுடைய, மனதைக் கட்டுவதில் ஜாக்கிரதையுள்ளதாயிருப்பினும், உன்னை ஸேவிப்பவர்களுடைய ஸகலவிதமான பந்தங்களையும் (கட்டுகளையும்) சீக்கிரத்திலேயே அவிழ்த்து உதறிவிடுகிறது. இது ஓர் ஆச்சர்யம்.

18 कुण्ठीकरोतु विपदं मम कुञ्चितभ्रू-
चापाञ्चितः श्रितविदेह भवानुरागः
रक्षोपकारमनिशं जनयञ्जगत्यां
कामाक्षि राम इव ते करुणाकटाक्षः ॥

குண்டீ கரோது விபதம் மம குஞ்சித ப்ரூ
சாபாஞ்சித: ச்ரித விதேஹ பவானுராக: |
ரக்ஷோபகாரமனிசம் ஜனயன் ஜகத்யாம்
காமாக்ஷி ராம இவ தே கருணாகடாக்ஷ: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே கருணா கடாக்ஷ: - உன்னுடைய கருணை நிறைந்த கடாக்ஷமானது, ராம இவ-ஸ்ரீ ராமனைப் போல், குஞ்சித ப்ரூசாபாஞ்சித: - வளைந்த புருவங்களாகிற வில்லையுடையதாயும், ச்ரித விதேஹ பவானுராக:- தன்னை யாச்ரயித்த மன்மதனிடத்தில் ப்ரியமுள்ளதாயும், ஜகத்யாம்-லோகத்தில், அனிசம் - எப்போதும், ரக்ஷோபகாரம் - ரக்ஷ

ணம் என்கிற உபகாரத்தை, ஜனயன்-உண்டுபண்ணிக்கொண்டு மம விபதம் - என்னுடைய ஆபத்துக்களை, குண்டீகரோது - போக்கடிக்கட்டும்.

1. ஸ்ரீ ராமன் கோதண்டத்தை தரித்தவராகையால் 'குஞ்சித சாபாஞ்சித:' தன்னை ஆச்ரயித்த ஸீதா (விதேஹபவா - வைதேஹீ) தேவியிடத்தில் அனுராகத்தோடிருப்பதால் 'ச்ரித விதேஹ பவானுராக:'. 'ரக்ஷோபகாரம்' என்பதற்கு ரக்ஷையாகிற உபகாரம் என்றும் ராக்ஷஸர்களுக்கு அபகாரம் என்றும் அர்த்தமுண்டு. ஸ்ரீ ராமரானவர் ஜகத்தில் ராக்ஷஸர்களுக்கு உபத்ரவத்தை எப்போதும் செய்தவராகையால் "ஜகத்யாம் ரக்ஷோபகாரம் அனிசம் ஜனயன்" என்று சொல்லப்பட்டது.

2. மேலே வந்த பதங்களெல்லாம் அம்பிகையின் கடாக்ஷத்திற்கும் பொருந்துமாகையால் அதை ஸ்ரீ ராமருக்கு ஸமமாகச் சொல்லப்பட்டது.

(18) ஹே! காமாக்ஷி! உன்னுடைய கருணா கடாக்ஷமானது ஸ்ரீ ராமனைப்போல், வளைந்த உனது புருவங்களாகிற வில்லினால் விளங்குகிறதாயும், ஆச்ரயித்தவனான மன்மதனிடம் (வைதேஹியிடம்) ஆசையுள்ளதாயும், உலகில் எப்போதும் ரக்ஷணமென்கிற உபகாரம் (ராக்ஷஸ அபகாரம்) செய்துவருவதாயும் விளங்குகிறது.

19 श्रीकामकोटि शिवलोचनशोषितस्य
शृङ्गारबीजविभवस्य पुनः प्ररोहे ।
प्रेमाम्भसार्द्रमचिरात्प्रचुरेण शङ्के
केदारमम्ब तव केवलदृष्टिपातम् ॥

ஸ்ரீ காமகோடி சிவலோசன சோஷிதஸ்ய
ச்ருங்கார பீஜ விபவஸ்ய புன:ப்ரரோஹே ।
ப்ரேமாம்பஸார்த்ரம் அசிராத் ப்ரசுரேண சங்கே
கேதாரம் அம்ப தவ கேவல த்ருஷ்டிபாதம் ॥

ஸ்ரீ காமகோடி அம்ப - ஹே காமகோடி! தாயே!, தவகேவலத்ருஷ்டிபாதம் - உன்னுடைய அஸாதாரணமான

கடாக்ஷமானது, சிவலோசன சோஷிதஸ்ய - பரமசிவனுடைய நேத்ராக்னியால், கருகிப்போன, ச்ருங்கார பீஜ விபவஸ்ய - ச்ருங்கார ரஸத்தின் உயர்ந்ததான பீஜத்திற்கு, புன: ப்ரரோஹ - திருப்பவும் செழுமையாய் வளர்வதற்கு, அசிராத் - உடனேயே, ப்ரசுரேண ப்ரேமாம்பஸா - அதிகமான ப்ரேமையாகிற ஜலத்தினால் ஆர்த்ரம் - நனைந்ததான, கேதாரம் - வயலாக, சங்கே - நினைக்கிறேன்.

இதில் பரமசிவனுடைய நேத்ராக்னியால் எரிக்கப்பட்ட மன்மதனைப் பிழைப்பூட்டிய அம்பிகையின் கருணை கடாக்ஷத்தை வர்ணிக்கப்பட்டது. மன்மதனை ச்ருங்கார ரஸத்தின் பீஜச்ரேஷ்டமாகச் சொல்லப்பட்ட அந்த பீஜமானது பரமசிவனுடைய நேத்ராக்னியினால் கருகிப்போய் விட்டது. அப்படியிருந்தும் அது அம்பிகையின் கடாக்ஷமாகிற வயலில் மிகவும் செழுமையாய் வளருகிறது. இதற்குக்காரணம் அந்தவயலானது கருணையென்ற ரஸம் நிறைந்ததாயிருப்பதினால் கருகிப் போன விரையும் முளைத்துவிடக் கூடியதாயிருக்கிறது.

(19) ஹே! அம்பிகே! ஸ்ரீ காம கோடியே! உன்னுடைய அஸாதாரணமான கடாக்ஷத்தை பரமசிவனுடைய நேத்ராக்னியால் கருகிப்போன, சிருங்கார ரஸத்தின் உயர்ந்ததான விதைக்கு, மறுபடியும் உயிர் கொடுத்துச் செழுமையாய் உடனே வளரச்செய்வதற்காக, பிரேமையாகிற பூர்மான ஜலத்தால் நிறைந்த ஒரு வயலை போல் நான் நினைக்கிறேன்.

20 माहात्म्यशेषधिरसौ तव दुर्विलंघ्य
संसारविन्ध्यगिरि कुण्टनकेलिचुञ्चुः ।
धैर्याम्बुधिं पशुपपतेश्चुलकीकरोति

कामाक्षि वीक्षणविजृम्भणकुम्भजन्मा ॥

மாஹாத்ம்ய சேவதிரஸௌ தவ துர்விலங்ய-
ஸம்ஸார விந்த்ய கிரி குண்டன கேளிசுஞ்சு:।
தைர்யாம்புதிம் பசுபதேச்சுளகீ கரோதி
காமாக்ஷி வீக்ஷண விஜ்ரும்பணகும்பஜன்மா ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! மாஹாத்ம்யசேவதி: - மாஹாத்ம்யம் நிறைந்ததான, அஸௌ தவ - இந்த உன்னுடைய, வீக்ஷண விஜ்ரும்பண - பார்வையின் ஆவிர்பமாவாகிற, கும்பஜன்மா-அகஸ்த்யரானவர், துர்விலங்க்ய- தாண்டுவதற்கரிதான, ஸம்ஸாரவிந்த்யகிரி - ஸம்ஸாரமாகிற விந்த்யபர்வதத்தை, குண்டன கேளி சுஞ்சு-அடக்குவதான விளையாட்டில் பெயர் பெற்றவராய், பசுபதே: - பரமசிவனுடைய, தைர்யாம்புதிம் - மனவுறுதியாகிற ஸமுத்ரத்தை, சுளகீ கரோதி - உள்ளங்கையளவாகச் செய்துவிடுகிறார்.

1. இதில், அம்பிகையின் கடாக்ஷத்தை அகஸ்த்யருக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. கும்பத்திலிருந்து உண்டானதால் அகஸ்த்யருக்குக் கும்பஜன்மா என்று பெயர். பரமசிவன் பார்வதியைக் கல்யாணம் செய்துகொள்ளும்போது அதைப் பார்க்க லோகத்தார்களெல்லாம் ஹிமாசலத்திற்கு வந்தவுடன் அது தாழ்ந்து தெற்கு ப்ரதேசமானது எக்கலித்து மேலே வரவும், பரமசிவன் பூமியை ஸமமாக்குவதற்காக அகஸ்த்யரை தெற்கே போயிருக்கச்சொன்னார். அப்படியவர் தெற்கே வந்துகொண்டிருக்கையில் விந்த்ய பர்வதமானது வளர்ந்து வழியை மறைத்துக்கொண்டிருந்தது. அவர் அதினுடைய கர்வத்தையடக்கி முன்போலிருக்கச்செய்தார். பிறகு ஒரு ஸமயம் ஸப்த ஸமுத்ரங்களையும் தன் உள்ளங்கையளவு தீர்த்தமாகச் செய்து பானம் பண்ணினதாகவும் ஒரு வ்ருத்தாந்தம் உண்டு. அவர் இவ்வளவு மஹிமையுள்ளவராகையால் அவரை 'மஹாத்ம்யசேவதி:' என்று இங்கு சொல்லப்பட்டது.

2. இவ்விதமான லீலைகள் அம்பிகையின் கடாக்ஷத்தினாலும் செய்யப்பட்டதாக இங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

(20) ஹே காமாக்ஷி! மாஹாத்ம்யம் நிறைந்த உனது கடாக்ஷ ஆவிர்ப்பாவமென்கிற அகஸ்த்திய முனிவர், தாண்டமுடியாததான ஸம்ஸாரமாகிற விந்த்ய பர்வதத்தை அடக்கும் விளையாட்டில் ஸாமர்த்தியமுள்ளவராகி பசுபதியான பகவானுடைய தைர்யமென்கிற ஸமுத்ரத்தை உள்ளங்கையளவாகச் செய்துவிடுகிறார்.

21 पीयूषवर्षशीशिरा स्फुटदुत्पलश्री
मैत्री निसर्गमधुरा कृततारकाप्तिः ।
कामाक्षिसंश्रितवती वपुरष्टमूर्तेः
ज्योत्स्नायते भगवति त्वदपाङ्गमाला ॥

பீயூஷ வர்ஷ சிசிரா ஸ்புடத் உத்பலஸ்ரீ-
மைத்ரீ நிஸர்க மதுரா க்ருத தாரகாப்தி: ।
காமாக்ஷி ஸம்ச்ரிதவதீ வபுரஷ்டமூர்த்தே:
ஜ்யோத் ஸ்னாயதே பகவதி த்வத் அபாங்க
[மாலா ॥

காமாக்ஷி, பகவதி - ஹே காமாக்ஷி! ஹே பகவதி! த்வத் அபாங்கமாலா - உன்னுடைய கடாக்ஷத்தின் வரிசையானது, பீயூஷவர்ஷசிசிரா - அம்ருதவர்ஷத்தினால் குளிர்ச்சியுள்ளதாயும், ஸ்புடத் - மலர்கிற, உத்பலஸ்ரீ மைத்ரீ - கருநெய்தல் புஷ்பத்தின் அழகுக்கு ஸ்நேஹபாவமுள்ளதாயும், நிஸர்க மதுரா - இயற்கையாகவே இனிமையானதாயும், க்ருததாரகாப்தி: - நக்ஷத்ரமண்டலத்தை அளாவினதாயும், அஷ்டமூர்த்தே: வபு: - பரமசிவனுடைய சரீரத்தை, ஸம்ச்ரிதவதீ - அடைந்ததாயும், ஜ்யோத்ஸ்னாயதே - நிலவைப்போலிருக்கிறது.

1. இதில் அம்பிகை கடாக்ஷ பரம்பரையை நிலவொளிக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. சந்த்ரனுடைய கிரணங்கள் அம்ருத வர்ஷம்போல் குளிரச்செய்வதாகச் சொல்லப்படும். புன்சிரிப்பை நிலவாக வர்ணிக்கும்போது வெண்ணிறமாகச் சொல்வது வழக்கமாயிருக்கையில், கடாக்ஷத்திலிருந்து வருவதாகச் சொல்லப்படும் நிலவானது நீல (சற்று கருமை) நிறமுடையதாக வர்ணிக்கப்படும். பரமசிவன் சந்த்ரனை சிரோபூஷணமாக தரித்திருப்பதால் அதின் கிரணங்கள் அவரை அடைவதாகச் சொல்லப்படும். அதேமாதிரி அம்பிகையின் பார்வையானது எப்போதும் தன் பதியாகிய பரமசிவனிடமே இருப்பதால் அவ்விதப் பார்வையின் நிலவானது அவரையே அடைவதாகச் சொல்லப்பட்டது.

2. தாரகா என்ற பதமானது நக்ஷத்ரத்தைக் குறிப்பதுடன் கண்ணின் கருவிழியையும் குறிக்கும். சந்த்ரனின் நிலவானது ஆகாசத்திலுள்ள நக்ஷத்ரங்களை வியாபிக்கையில் கடாக்ஷ நிலவானது கண்விழியை வியாபித்திருப்பதால் இரண்டையும் 'க்ருத தாரகாப்தி:' என்று வர்ணிக்கப்பட்டது.

(21) பகவதியான ஹே காமாக்ஷி! உன்னுடைய கடாக்ஷ வரிசையானது, நிலவைப்போல், அமிர்தவர்ஷத்தினால் குளிர்ச்சியுள்ளதாயும், மலருகிற நீலோத்பலபுஷ்பத்தின் சோபைக்கு ஸ்நேஹமுள்ளதாயும், இயற்கையாகவே இனிமையானதாயும், நக்ஷத்திர மண்டலத்தை அளாவினதாயும், அஷ்டமூர்த்தியான பரமசிவனுடைய சரீரத்தை அடைந்ததாகவும் விளங்குகிறது.

22 अम्ब स्मरप्रतिभटस्यवपुर्मनोज्ञ
मम्भोजकाननमिवाञ्चितकण्टकाभम् ।
भृङ्गीव चुम्बति सदैवसपक्षपाता
कामाक्षि कोमलरुचिस्त्वदपाङ्गमाला ॥

அம்ப ஸ்மர ப்ரதிபடஸ்ய வபுர் மனோக்ஞம்
அம்போஜ கானனம் இவாஞ்சித கண்டகாபம் ।
ப்ருங்கீவ சும்பதி ஸதைவ ஸபக்ஷபாதா
காமாக்ஷி கோமளருசிஸ் த்வத் அபாங்கமாலா ॥

அம்ப, காமாக்ஷி - தாயே! காமாக்ஷி! கோமளருசி: - கண்களுக்கினிமையான காந்தியோடு கூடிய, த்வத் அபாங்கமாலா - உனது கடாக்ஷங்களின் வரிசையானது, அம்போஜ கானனமிவ - தாமரைபுஷ்பங்களின் வனம்போல், அஞ்சித கண்டகாபம் - மயிர்க்கூச்சலின் அழகோடு கூடியதும், மனோக்ஞம் - மனதை கவருகிறதுமான, ஸ்மர ப்ரதிபடஸ்ய - (மன்மதனை யெதிர்த்து யுத்தம் செய்தவரான) பரமசிவனுடைய, வபு: - சரீரத்தை, ப்ருங்கீவ - வண்டுபோல், ஸதைவ - எப்போதும், ஸபக்ஷபாதா - விசேஷமான ஆசையுடையதாய், சும்பதி - (முத்தம் கொடுப்பதுமாதிரி) மேலே பட்டுக்கொண்டிருக்கிறது.

இதில் அம்பிகையின் கடாக்ஷமாலை ஒரு வண்டு போலவும் பரமசிவனுடைய சரீரத்தை அந்த வண்டு சுற்றிக் கொண்டிருக்கும் தாமரை வனமாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தாமரைப் புஷ்பத்தின் தண்டானது முள்ளுடனிருக்கிறதுபோல் பரமசிவனுடைய சரீரமானது புளகாங்கிதமாய் மயிர்க்கூச்சலோடிருப்பதால் அதை 'அம்போஜகானனம் அஞ்சிதகண்டகாபம்' என்று சொல்லப்பட்டது. இதேமாதிரி பரமசிவனுடைய ஆலிங்கனத்தால் மயிர்க்கூச்சலோடு கூடிய அம்பிகையின் கழுத்தை அவனுடைய முகமாகிற தாமரை புஷ்பத்திற்குக் காம்பு போல் இருப்பதாக ஸ்ரீ மதாசார்யாள் 'ஸௌந்தர்யலஹரீ'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

'புஜாச்லேஷான்னித்யம் புரதமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முககமல நாளச்ரியமியம் ।'

இங்கு பரமசிவனுடைய சரீரம் முழுவதையும் அவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

(22) தாயே! காமாக்ஷி! கண்ணுக்கு இனிமையானதேஜஸ்ஸுடன் கூடிய உனது கடாக்ஷவரிசையானது, தாமரைப்புஷ்பங்களின் வனம்போல், மயிர்கூச்சலின் அழகோடுகூடியதும், மன்மதனுக்கு எதிரியான பரமசிவனுடைய அழகிய சரீரத்தை வண்டுபோல் எப்போதும் விசேஷ ஆசையுடன் முத்தமிடுவது போலிருக்கிறது.

23 केशप्रभापटलनीलवितानजाले
कामाक्षिकुण्डलमणिच्छविदीपशोभे ।
कस्रे कटाक्षरुचिरङ्गतले कृपाख्या
शैलूषकी नटति शंकरवल्लभेते ॥

கேசப்ரபாபடல நீல விதானஜாலே
காமாக்ஷி குண்டலமணிச்சவி தீபசோபே ।
கம்ரே கடாக்ஷருசிரங்கதலே க்ருபாக்யா
சைலூஷகீ நடதி சங்கரவல்லபேதே ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! சங்கர வல்லபே - பரமசிவனுடைய பத்னியே! கேசப்ராபாடல - கூந்தலின் காந்தியினுடைய விசேஷமாகிற, நீலகிரிதாஜாலே - கருத்ததான அசுமானகிரியோடு கூடியதும், குண்டல மணிச்சவி - காதின் குண்டலங்களிலுள்ள ரத்னங்களின் காந்தியாகிற, தீபசோபே - தீபங்களால் ப்ரகாசமுடையதும், கம்ரே - மிகவும் அழகானதுமான, கடாக்ஷ ருசிரங்கதலே - உனது கடாக்ஷத்தின் காந்தியாகிற நாடகமேடையில், க்ருபாக்யா - க்ருபையென்கிற, சைலூஷீ - நடிகையானவள், நடதி - ஆடிக்கொண்டிருக்கிறாள்.

இதில் அம்பிகையின் கடாக்ஷகாந்தியை ரங்கஸ்தலமாகவும், அம்பிகையின் கருணையானது அதில் நடிக்கும் நடிகையாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, அம்பிகையின் கடாக்ஷமானது மிருதுவான கருணையோடு கூடியது என்பது தாத்பர்யம்.

(23) சங்கரப்ரியான ஹே காமாக்ஷி! உனது கிருபையாகிற நடிகையானவள், உனது தலைமயிர்காந்தி ஸமூஹமாகிற கருப்பு அசுமானகிரியுடன் கூடியதும், உனது காது குண்டல மணியின் காந்தியாகிற தீபத்தினால் விளங்குவதுமான, உனது கடாக்ஷமாகிற நாடகமேடையில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிறாள்

24 अत्यन्तशीतलमतन्द्रयतु क्षणार्धं
मस्तोकविभ्रममनङ्गविलासकन्दम् ।
अल्पस्मितादृतमपारकृपाप्रवाह
मक्षिप्ररोहमचिरान्मयि कामकोटि ॥

அத்யந்த சீதளம் அதந்த்ரயது க்ஷணார்த்தம்
அஸ்தோக விப்ரமம் அனங்கவிலாஸகந்தம்।
அல்ப ஸ்மிதாத்ருதம் அபாரக்ருபா ப்ரவாஹம்
அக்ஷிப்ரரோஹம் அசிரான்மயி காமகோடி॥

காமகோடி - காமகோடி ஸ்வரூபிணியான ஹே காமாக்ஷி! அத்யந்த சீதளம் - மிகவும் குளிர்ச்சியானதும், அன்தோக விப்ரமம் - மிகுந்த அழகுள்ளதும், அனங்கவிலாஸகந்தம் - மன்மதனுடைய விலாஸத்திற்குக் காரணமானதும், அல்பஸ்மிதாந்கிதம் - கொஞ்சம் சிரிப்போடு (புன்சிரிப்போடு) கூடியதும், அபாரக்ருபாப்ரவாஹம் - கரையில்லாத கருணாப்ரவாஹத்தை யுடையதுமான, அக்ஷிப்ரரோரஹம் - உனது கடாக்ஷமானது, அசிராத் - சீக்ரத்தில் மயி - என்னிடம், க்ஷணார்த்தம் - அரைக்ஷணமாவது அதந்த்ரயது - இருந்து களிப்பாரட்டும்.

(24) காமகோடி ஸ்வரூபிணியான ஹே காமாக்ஷி! மிகவும் குளிர்ச்சியானதும், அதிக அழகுள்ளதும், மன்மதவிலாஸத்திற்குக் காரணமானதும், மந்தஸ்மிதத்தோடு கூடியதும், கரையில்லாத கருணைப்ரவாஹத்தை யுடையதுமான உனது கடாக்ஷமானது, சீக்கிரத்தில் என்னிடம் வந்து அரைக்ஷணகாலமாவது தங்கிக் களிப்பாரட்டும்,

25 मन्दाक्षरागतरलीकृतिपारतन्त्र्या
त्कामाक्षि मन्थरतरां त्वदपाङ्गदोलाम् ।
आरुह्य मन्दमतिकौतुकशालि चक्षु
रानन्दमेति मुहुरर्धशशाङ्कमौलेः ॥

மந்தாக்ஷராக தரளீக்ருதி பாரதந்த்ர்யாத்
காமாக்ஷி மந்தரதராம் த்வத் அபாங்கதோலாம்।
ஆருஹ்ய மந்தம் அதிகௌதுகசாலி சக்ஷு:
ஆனந்தமேதி முஹு: அர்த சசாங்க மௌளே:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, மந்தாக்ஷராக - உனது கடாக்ஷத்தின் அழகினால், தரளீக்ருதி பாரதந்த்ர்யாத் - தரளமான நிலைமை அடைந்து பரவசப்பட்டிருப்பதினால், அதிகௌதுக சாலி - அதிகமான உத்ஸாஹத்தோடு விளங்கும், அர்தசசாங்கமௌளே:- அர்த சந்திரனை சிரஸில் தரித்திருக்கும் பரமசிவனுடைய, சக்ஷு: கண்ணானது (பார்வையானது), மந்தரதராம் - மிகவும் மெதுவாக ஆடிக்கொண்டிருக்கும், த்வத் அபாங்க தோலாம் - உனது கடா

கும்மாகிற ஊஞ்சலில், மந்தம் ஆருஹ்ய - மெதுவாக ஏறிக்கொண்டு, முஹு: ஆனந்தம் எதி - அடிக்கடி (இடைவிடாமல்) ஆனந்தத்தை அடைகிறது.

இதில் அம்பிகையினுடைய கடாக்ஷத்தை ஒரு ஊஞ்சலாகவும், அதின்மீது பரமசிவனுடைய பார்வையானது இருந்து ஆடிக் கொண்டிருப்பதாகவும் வர்ணிக்கப்பட்டது. இப்படி அம்பிகையின் கடாக்ஷத்தில் ஈடுபட்ட பார்வையோடு பரமசிவன் இருப்பதாகச் சொல்லியதினால் அவர்களுக்குள் பரஸ்பரமிருக்கும் ப்ரேமாதிசயமானது எடுத்துக் காட்டப்பட்டது.

(25) காமாக்ஷி! அர்த்த சந்திரசேகரனான பரமசிவனுடைய கண்ணானது அதிஸந்தோஷத்துடன் உனது கடாக்ஷமாகிற ஊஞ்சலில் மெதுவாக ஏறிக்கொண்டு இடைவிடாத ஆனந்தமடைகிறது. அந்த கடாக்ஷ ஊஞ்சல் எப்படியிருக்கிறதென்றால் லஜ்ஜையாலும் அநுராகத்தினாலும் பரவசமாக சஞ்சலமாக்கப்பட்டிருப்பதால் மெதுவாக அசைந்து கொண்டிருக்கிறது.

26 त्रैयम्बकं त्रिपुरसुन्दरि हर्म्यभूमि
रङ्गं विहारसरसी करुणाप्रवाहः ॥
दासाश्च वासवमुखाः परिपालनीयं
कामाक्षि विश्वमपि वीक्षणभूभृतस्ते ॥

த்ரையம்பகம் த்ரிபுரஸுந்தரி ஹர்ம்யபூமி:
அங்கம் விஹாரஸரஸீ கருணாப்ரவாஹ: |
தாஸாச்ச வாஸவமுகா: பரிபாலனீயம்
காமாக்ஷி விச்வமபி வீக்ஷண பூப்ருதஸ்தே ||

த்ரிபுரஸுந்தரி காமாக்ஷி-ஹே த்ரிபுரஸுந்தரி! ஹே காமாக்ஷி, தே வீக்ஷண பூப்ருத:- உனது பார்வையாகிற ராஜாவுக்கு, த்ரையம்பகம் அங்கம் - பரமசிவனுடைய சரீரமானது, ஹர்ம்ய பூமி:- அரண்மனையாகவும், கருணாப்ரவாஹ:- உனது கருணையாகிற ப்ரவாஹமானது, விஹாரஸரஸீ - விளையாடும் குளமாகவும், வாஸவமுகா:- இந்திரன் முதலான தேவர்கள், தாஸாச்ச - வேலைக்காரர்களாகவும். விச்வம் அபி - உலகம் முழுவதுமே,

பரிபாலனீயம் - ஆளுகைக்குள்பட்டதான ராஜ்யமாகவும். (இருக்கிறது).

(26) த்ரிபுராந்தகி! ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற அரசனுக்கு பரமசிவனுடைய சரீரம் ஆஸ்தமியாகவும், உனது கருணையாகிற பிரவாஹமானது, விளையாடும் குளமாகவும், இந்திரன் முதலான தேவர்கள் வேலைக்காரர்களாகவும், உலகம் முழுவதும் ஆளுகைக்குள்பட்ட ராஜ்யமாகவும் இருக்கிறது.

27 वागीश्वरी सहचरी नियमेन लक्ष्मी
भ्रूवल्लरीवशकरी भुवनानि गेहम् ।
रूपं त्रिलोकनयनामृतमम्ब तेषां
कामाक्षि येषु तव वीक्षणपारतन्त्री ॥

வாகீச்வரீ ஸஹசரீ நியமேந லக்ஷ்மீ:
ப்ரூவல்லரீ வசகரீ புவனானி கேஹம் ।
ரூபம் த்ரிலோக நயனாம்ருதம் அம்ப தேஷாம்
காமாக்ஷி யேஷு தவ வீக்ஷண பாரதந்த்ரீ ॥

அம்ப காமாக்ஷி - தாயே! காமாக்ஷி! யேஷு - எவர்களிடத்தில், தவ வீக்ஷண பாரதந்த்ரீ - உனது பார்வைக்கு வசப்படுவதானது (பார்வையானது) ஏற்படுகிறதோ, தேஷாம் - அவர்களுக்கு, நியமேன - கட்டாயம், வாகீச்வரீ - வாக்குக்கு ஈச்வரியான ஸரஸ்வதியானவள், ஸஹசரீ - தோழியாக ஆகிறாள், லக்ஷ்மீ: லக்ஷ்மிதேவியானவள், ப்ரூவல்லரீ வசகரீ - கண்ஜாடையை அநுசரித்து நடப்பவளாக ஆகிறாள், புவனானி - சதுர்தச புவனங்களும், கேஹம் - வீடாகவும், ரூபம் - ரூபமானது, த்ரிலோக நயனாம்ருதம் - மூன்று லோகங்களிலிருப்பவர்களுடைய கண்களுக்கு அம்ருதமாகவும் ஏற்படுகிறது.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷமானது கிடைக்கப்பெற்றவனுக்கு ஏற்படும் பாக்யாதிசயமானது வர்ணிக்கப்பட்டது. அம்பிகையின் பக்தனுக்கு மேன்மையான வாக்கும் அதிகமான ஸம்பத்தும், மனோஹரமான ரூபமும் இம்மாதிரி ஏற்படுவதைப் பற்றி ஸ்ரீமதாசார்யாள்

'ஸௌந்தர்யா லக்ஷ்மீ ஹரி ஸபத்னீ விஜயதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா ॥'

என்பதாக வர்ணித்திருக்கிறார்கள்.

2. புருவத்தைக் கொடிக்கு ஸமானமாக வர்ணிப்பது வழக்கமானதால் ப்ரூவல்லரீ, ப்ரூலதா என்ற பதங்கள் ஏற்படுகின்றன.

(27) அம்பிகே! காமாக்ஷி! உனது கடாக்ஷமானது எவர்களிடம் ஏற்படுகிறதோ, அவர்களுக்கு ஸரஸ்வதீ தோழியாகிறாள். மஹாலக்ஷ்மியானவள் கண் ஜாடையை அநுஸரித்து நடப்பவளாக அவர்களுக்கு வசப்படுகிறாள். பதினான்கு உலகமும் அவர்களுக்கு வீடாகிறது. அவர்களுடைய ரூபமானது மூன்று லோகங்களிருப்பவர்களுடைய கண்களுக்கு அம்ருதமாகவும் ஏற்படுகிறது.

28 माहेश्वरं झटिति मानसमीनमम्ब
कामाक्षि धैर्यजलधौ नितरां निमग्नम् ।
जालेन शृङ्खलयति त्वदपाङ्गनाम्ना
विस्तारितेन विषमायुधदाशकोऽसौ ॥

மாஹேச்வரம் ஜடிதி மானஸமீனமம்ப
காமாக்ஷி தைர்யஜலதௌ நிதராம் நிமக்னம் ।
ஜாலேன ச்ருங்கலயதி த்வதபாங்க நாம்னா
விஸ்தாரிதேன விஷமாயுத தாசகோऽஸௌ ॥

அம்ப காமாக்ஷி - தாயே! காமாக்ஷி! தைர்ய ஜலதௌ - தைர்யமாகிற ஸமுத்திரத்தில், நிதராம் நிமக்னம் - மிகவும் முழுகியிருந்த, மாஹேச்வரம் - பரமசிவனுடைய, மானஸ மீனம் - மனதாகிற மீனை, அஸௌ விஷமாயுத தாசக:- இந்த மன்மதனென்கிற செம்படவனானவன், த்வத் அபாங்க நாம்னா - உனது கடாக்ஷமாகிற, விஸ்தாரிதேன ஜாலேன - விசிப்போடப்பட்ட வலையினால், ஜடிதி - சீக்கிரத்தில், ச்ருங்கலயதி - கட்டிவிடுகிறான்.

28. அம்ப! காமாக்ஷி! மன்மதனென்கிற இந்த வேடனானவன் உனது கடாக்ஷமென்கிற வலையை விஸ்தரித்து, தைர்யமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கியிருக்கிற, மஹேச்வரனுடைய மனஸ்ஸான மீனை அந்த வலையில் மாட்டிவிடுகிறான்.

29 उन्मथ्य वोधकमलाकरमम्वजाड्य
स्तम्बेरमं मम मनो विपिने भ्रमन्तम् ।
कुण्ठीकुरुष्व तरसा कुटिलाग्रसीम्ना
कामाक्षि तावक कटाक्षमहाङ्कुशेन ॥

உன்மத்ய போதகமலாகரம் அம்ப ஜாட்ய
ஸ்தம்பேரமம் மம மனோவிபினே ப்ரமந்தம்|
குண்டீகுருஷ்வ தரஸா குடிலாக்ரஸீம்னா
காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹாங்குசேன||

அம்ப காமாக்ஷி—தாயே! காமாக்ஷி!, போத கமலாகரம்—எனது அறிவாகிற தாமரை புஷ்பத்தை, உன்மத்ய—கசக்கிக் கொண்டு, மம மனோவிபினே—என்னுடைய மனதாகிற காட்டில் ப்ரமந்தம்—அலைந்துகொண்டிருக்கும், ஜாட்ய ஸ்தம்பேரமம்—அக்ஞானமாகிற யானையை, குடிலாக்ரஸீம்னா—வளைந்த நுனியையுடைய, தாவக கடாக்ஷ மஹாங்குசேன—உனது கடாக்ஷமாகிற ச்ரேஷ்டமான அங்குசத்தினால், தரஸா—சீக்கிரமாக குண்டீகுருஷ்வ—அடக்கிவிடு.

1. காட்டுயானைகள் காடுகளிலுள்ள தடாகங்களில் இறங்கி அங்கிருக்கும் தாமரை புஷ்பங்களை மிதித்துக்கொண்டு அலைந்து திரிவதாக வர்ணிக்கப்படுவது வழக்கம்.

2. கடாக்ஷமென்பது கோணலான பார்வையானதாகவும், கண்டாக்கோடாலியானது நுனியில் வளைந்திருக்குமாகையாலும் இரண்டையும் 'குடிலாக்ர ஸீம்னா' என்று வர்ணிக்கப்பட்டது.

3, யானைகளைக் கட்டும் மரத்திற்கு ஸ்தம்பமென்று பெயர். அதில் கட்டியிருக்கும் யானையானது ஆடிக்கொண்டிருக்குமாகையால் அதற்கு 'ஸ்தம்பேரம:' என்று பெயர்.

(29) தாயே! காமாக்ஷி! உன்னுடைய கடாக்ஷமாகிற, கூர்மையான நுனியையுடைய அங்குசாயுதத்தினால் எனது அஞ்ஞானமாகிற யானையை அடக்குவாயாக. அந்த யானையானது அறிவாகிற தாமரைப்பூவை நசுக்கி எனது மனதாகிற காட்டில் திரிந்து கொண்டிருக்கிறது.

30 उद्वेल्लितस्तबकितैर्ललितैर्विलासै-
रुत्थाय देवि तव गाढकटाक्षकुञ्जात् ।
दूरं पलाययतु मोहमृगीकुलं मे
कामाक्षि सत्वरमनुग्रह केसरीन्द्रः ॥

உத்வேல்லித ஸ்தபகிதைர் லலிதைர் விலாஸை:
உத்தாய தேவிதவ காட கடாக்ஷகுஞ்ஜாத்|
தூரம் பலாயயது மோஹ ம்ருகீகுலம் மே
காமாக்ஷி ஸத்வரம் அனுக்ரஹ கேஸரீந்த்ர:||

தேவி காமாக்ஷி—ஹே தேவி!. காமாக்ஷி! அனுக்ரஹ கேஸரீந்த்ர:- உனது அனுக்ரஹமாகிற ஸிம்ஹேந்திரமானது, உத்வேல்லித ஸ்தபகிதை:-பிடரிமயிர்களை உதருவதான, லலிதை: விலாஸை:-அழகான சேஷ்டையோடு, தவ காட கடாக்ஷகுஞ்ஜாத்-உனது கடாக்ஷமாகிற அடர்ந்த புதரிலிருந்து, உத்தாய—வெளிக்கிளம்பி, மே மோஹ ம்ருகீலம்—என்னுடைய மோஹமாகிற (அக்ஞானமாகிற) மான்கூட்டத்தை, ஸத்வரம்—வேகத்தோடு, தூரம் பலாயயது—தூரத்தில் துரத்திவிடட்டும்.

(30) தேவி! காமாக்ஷி! உனது அநுக்ரஹமாகிற ஸிம்ஹமானது பிடரிரோமத்தை உதருவதாகிய அழகிய சேஷ்டையோடு உனது கடாக்ஷமாகிற அடர்ந்த புதரிலிருந்து வெளிக்கிளம்பி, என்னுடைய அக்ஞானமாகிற மான் கூட்டத்தை வேகத்துடன் தூரத்தில் விரட்டட்டும்.

31 स्नेहाद्दृतां विदालितोत्पलकान्तिचोरां
जेतारमेव जगदीश्वरि जेतुकामः ।

मानोद्धतो मकरकेतुरसौ धुनीते
कामाक्षि तावककटाक्षकृपाणवल्लीम् ॥

ஸ்நேஹாத்ருதாம் விதளிதோத்பல காந்தி
சோராம்
ஜேதாரமேவ ஜகதீச்வரி ஜேதுகாம: ।
மாநோத்ததோ மகரகேதுரஸௌ துனீதே
காமாக்ஷி தாவக கடாக்ஷக்ருபாண வல்லீம்॥

ஜகதீச்வரி காமாக்ஷி—ஹே ஜகதீச்வரி ! ஹே காமாக்ஷி !
மாநோத்தத:- மிகவும் மானியான, அஸௌ மகரகேது:- இந்த மன்மதனானவன், ஜேதாரமேவ ஜேதுகாம:- தன்னை ஜயித்தவரான பரமசிவனையே திரும்பவும் ஜெயிக்கவேண்டுமென்ற ஆசையுடையவனாய், ஸ்நேஹாத்ருதாம்— எண்ணெயினால் கூர்ப்புள்ளதாகச் செய்யப்பட்டதும், விதளிதோத்பல காந்தி சோராம்—மலர்ந்த நீலோத்பலத்தின் காந்தியை அபகரிப்பதுமான, தாவக கடாக்ஷ—உனது கடாக்ஷமாகிற, கடாக்ஷ க்ருபாணவல்லீம்—கத்தியை, துனீதே—சுழட்டி வீசுகிறான்.

1. பரமசிவன் தனக்கு வசப்படாமல் தன்னை ஜயித்து எரித்துவிட்டதினால் அவரிடம் பகைக்குப்பகை தீர்க்கவேண்டி மன்மதனுக்கு ஆசையிருப்பதாக சொல்லப்படும். இதை ஸ்ரீமதாசார்யாள் 'சிராத் அந்த: சல்யம் தஹனக்ருதம் உன் மூலிதவதா!' என்பதாக 'ஸௌந்தர்ய லஹரீ'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

2. ஸ்நேஹமென்பது ப்ரியத்தைக் குறிப்பதுடன் எண்ணையையும் எண்ணெயுடைய வஸ்துக்களையும் குறிக்கும்.

3. கத்தியானது மெல்லியதாயும், நீண்டும், வளைக்கக் கூடியதாயுமிருப்பதால் அதை கொடிக்கு ஸமமாக வர்ணிப்பது வழக்கம்.

(31) ஜகதீச்வரியான ஹே காமாக்ஷி! மிகவும் மானமுள்ளவனான இந்த மன்மதன் பரமசிவனை ஜயிக்கவேணுமென்ற ஆசையுள்ளவனாய், ஸ்நேஹத்தால் (எண்ணெயால்) மிகவும் கூருக்

செய்யப்பட்டதும், மலர்ந்த நீலோத்பல புஷ்பத்தின் காந்தியை அபஹரிப்பதுமான உனது கடாக்ஷமாகிற கத்தியைச் சுற்றி வீசுகிறாய்.

32 श्रौतीं व्रजन्नपि सदा सरणिं मुनीनां
कामाक्षि संततमपि स्मृतिमार्गगामी ।
कौटिल्यमम्ब कथमस्थिरतां च धत्ते
चौर्यं च पङ्कजरुचां त्वदपाङ्गपातः ॥

ச்ரௌதீம் வ்ரஜன்னபி ஸதாஸரணிம் முனீனாம்
காமாக்ஷி ஸந்ததமபி ஸ்ம்ருதி மார்க்க காமீ |
கௌடில்யம் அம்ப கதம் அஸ்திரதாம் ச தத்தே
சௌர்யம் ச பங்கஜருசாம் த்வத் அபாங்கபாத:॥

காமாக்ஷி அம்ப—ஹே காமாக்ஷி! தாயே!, த்வத் அபாங்கபாத:- உனது பார்வையானது, ஸதா-எப்பொழுதும், ச்ரௌதீம் ஸரணிம்-ச்ருதிகளின் போக்கை (வழியை), வ்ரஜன் அபி - அனுசரித்த போதிலும், ஸந்ததம்-ஸதாகாலமும், முனீனாம் ஸ்ம்ருதிமார்க காமீ அபி-முனிச்ரேஷ்டர்களுடைய மனதில் இருந்தபோதிலும், கௌடில்யம்—குடில ஸ்வபாவத்தையும், அஸ்திரதாம்—ஸ்திரமில்லாதிருத்தலையும், பங்கஜருசாம் சௌர்யம் ச—தாமரை புஷ்பங்களின் காந்தியைத் திருடுவதையும் கதம் தத்தே—எப்படி கைக்கொள்ளுகிறது ?

1. இதில் அம்பிகையின் கடாக்ஷமானது ச்ருதி, ஸ்ம்ருதிகளில் ஸம்பந்தத்தோடிருந்தும் கெடுதலான ஸ்வபாவத்தோடிருப்பதாக நிந்தாஸ்துதியாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. உத்தம ஸ்திரீகளின் கண்கள் கர்ணாந்த விச்ராந்தமாக (காதுவரையில் நீண்டு) இருப்பதாகச் சொல்லப்படுவதால் அம்பிகையின் கடாக்ஷமானது காதுக்கு ஸமீபத்தில் செல்லுவதாக 'ச்ரௌதீம் ஸரணிம் ஸதா வ்ரஜன்' என்று சொல்லப்பட்டது.

2. ஸ்ம்ருதி யென்றால் நினைவு, ஞாபகம் என்றும் அர்த்தம்.

3. ஆகவே அம்பிகையின் கடாக்ஷமானது (அம்பிகையின் காதுகளுடைய) ச்ருதிகளுடைய மார்க்கத்திலும், (முனீச்வரர்களுடைய மனதுகளுடைய) ஸ்ம்ருதிகளுடைய மார்க்கத்திலும், போவதாக ஏற்படுகிறது. இப்படி உத்தமமான பழக்கமிருந்தும் அதற்கு கௌடில்யம் முதலான தோஷங்கள் எப்படி ஏற்பட்டனவென்று கவி ஆச்சர்யப்படுகிறார்.

4. கௌடில்யம் என்பது குடிலமான ஸ்வபாவம். நேராக (ஒழுங்காக) இருப்பதற்கு எதிரிடையானது. அம்பிகையின் கடைக்கண் பார்வையானது இங்கு வர்ணிக்கப்படுவதால் அதற்குக் கௌடில்யம் இருப்பதாகச் சொல்வது பொருத்தமாக இருக்கிறது. அது சஞ்சல ஸ்வபாவமுள்ளதாகையால் அதற்கு அஸ்திரதா (நிலையில்லாமலிருப்பது) உண்டென்றுசொல்வதும் பொருத்தம். மேலும், தாமரை புஷ்பங்களின் காந்தியைத் தோக்கடித்த காந்தியோடிருப்பதால் அந்த காந்தியை அபகரிப்பதாகச் சொல்லி அதற்கு சௌர்யம் (திருட்டுத்தனம்) இருப்பதாகச் சொல்வதும் பொருத்தம்.

(32) ஹே! அம்ப! காமாக்ஷி! உனது கடாக்ஷபாதமானது எப்போதும் சுருதிகளின் வழியை அனுஸரிப்பதாயிருந்தும், ரிஷிகளுடைய ஸம்ருதிமார்க்கத்தில் எப்போதும் இருந்தபோதிலும், ஏன் இந்த குடில ஸ்வபாவத்தையும், ஸ்திரமிலாத் தன்மையையும், தாமரைப்பூவின் காந்தியைத் திருடும் ஸ்வபாவத்தையும் கைகொண்டிருக்கிறது?

33 नित्यं श्रुतेः परिचितौ यतमानमेव
नीलोत्पलं निजसमीप निवासलोलम् ।
प्रीत्यैव पाठयति वीक्षणदेशिकेन्द्रः
कामाक्षि किंनु तव कालिमसंप्रदायम् ॥

நித்யம் ச்ருதே: பரிசிதௌ யதமானமேவ
நீலோத்பலம் நிஜஸமீப நிவாஸ லோலம் ।
ப்ரீத்யைவ பாடயதி வீக்ஷண தேசிகேந்த்ர:
காமாக்ஷி கிம் நு தவ காளிமஸம்ப்ரதாயம் ॥

காமாக்ஷி—ஹே காமாக்ஷி, தவ—உனது, வீக்ஷண தேஸி கேந்த்ர:- பார்வையாகிற குருநாதனானவர், நித்யம்—ஸதாகாலமும், ச்ருதே: பரிசிதௌ—ச்ருதியின் அப்யாஸத்தை (தெரிந்து கொள்வதை), யதமானம் ஏவ—முயற்சித்துக்கொண்டேயிருப்பதும், நிஜ ஸமீப நிவாஸ லோலம்—தன் ஸமீபத்திலிருப்பதற்கு ஆசைப்படுவதுமான, நீலோத்பலம் (கருநெய்தல் புஷ்பத்தை), காளிமஸம்ப்ரதாயம்—கல்மஷத்தின் தன்மையை ப்ரீத்யைவ—ப்ரீதியோடு, பாடயதி கிம் நு—சொல்லிவைக்கிறாரா என்ன ?

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை குருவாகவும் நீலோத்பலத்தை அதின் சிஷ்யனாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. சிஷ்யன் குருவினிடமிருந்து வேதங்களை நித்யமும் அத்யயனம் செய்வானாகையால் 'நித்யம் ச்ருதே: பரிசிதௌ யதமானம்' என்று சொல்லப்பட்டது. சிஷ்யன் குருவினுடைய ஸமீபத்திலேயே இருந்துகொண்டு சுச்ருஷை செய்வானாகையால் 'நிஜ ஸமீப நிவாஸலோலம்' என்றும் சொல்லப்பட்டது.

2. உத்தமஜாதி ஸ்திரீகள் காதில் நீலோத்பலம் முதலான புஷ்பங்களை அணிந்துகொள்வது வழக்கமாகையால் 'நித்யம் ச்ருதே: பரிசிதௌ யதமானம்' என்பது நீலோத்பலத்துக்கும் பொருத்தமாக இருக்கிறது. அப்படியிருக்கையில் (உத்தம ஸ்திரீகளுடைய கண்கள் அவர்களுடைய காதுகள் வரையில் நீண்டிருப்பதாக வர்ணிக்கப்படுவதை அனுஸரித்து) அது கண்ணுக்கு ஸமீபமாயிருக்குமாகையால் 'நிஜ ஸமீப நிவாஸ லோலம்' என்பதும் அதற்குப் பொருத்தமாக இருக்கிறது.

3. இவ்விதமான சிஷ்யனுக்கு குரு என்ன உபதேசம் செய்கிறாரென்றால் அது 'காளிமஸம்ப்ரதாய'த்தைப்பற்றி, காளிமமென்றால் கறுப்பாயிருப்பது. ஸ்திரீகளுடைய கடாக்ஷத்தை கறுப்பாகவும் கண்களை நீலோத்பலத்திற்கு ஸமானமாகவும் வர்ணிப்பது கவிகளுடைய ஸம்ப்ரதாயம்.

4. பாபத்தை கறுப்பாக வர்ணிப்பதும் கவிகளுடைய வழக்கம். ஆகவே 'காளிம ஸம்ப்ரதாய'த்தைப்பற்றி சொல்லிக் கொடுப்பதென்றால் பாபத்தை உபதேசிப்பது என்று அர்த்த

மாகும். அவ்வித உபதேசத்தை எதற்காக இந்த கடாக்ஷகுரு (அதுவும் ப்ரீதியோடு) செய்கிறார் என்பதாகக் கவி ஆச்சரியப் படுகிறார்.

(33) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற ஆசார்யன் எப்போதும் சுருதியின் பரிசயத்தில் முயற்சிப்பதாயும், தன் ஸமீபத்தில் வஸிக்க விரும்புவதுமான நீலோத்பல புஷ்பத்திற்கு பிரீதியுடன், கருப்பாயிருக்கும் தன்மையான ஸம்பிரதாயத்தைச் சொல்லிவைக்கிறது என்ன?

34 भ्रान्त्वा मुहुः स्तबकितस्मितफेनराशौ
कामाक्षि वक्त्ररुचि संचयवारिराशौ ।
आनन्दति त्रिपुरमर्दन नेत्रलक्ष्मी
रालम्ब्य देवि तव मन्दमपाङ्गसेतुम् ॥

ப்ராந்த்வா முஹு: ஸ்தபகித ஸ்மிதபேனராசெள
காமாக்ஷி வக்த்ரருசி ஸஞ்சய வாரிராசெள|
ஆனந்ததி த்ரிபுரமர்தன நேத்ரலக்ஷ்மீ:
ஆலம்ப்ய தேவி தவ மந்தம் அபாங்கஸேதும் ||

தேவி காமாக்ஷி - ஹே தேவி! காமாக்ஷி!, த்ரிபுரமர்தன - பரமசிவனுடைய, நேத்ர லக்ஷ்மீ:- பார்வையானது, ஸ்தபகித ஸ்மித - அடுக்கடுக்கான உனது புன்சிரிப்புகளாகிற, பேனராசெள - நுரைகள் நிறைந்த, வக்த்ர ருசி ஸஞ்சய - உனது முகத்தினுடைய காந்தியின் சேர்க்கையாகிற, வாரி ராசெள - ஸமுத்ரத்தில், முஹு: ப்ராந்த்வா - அடிக்கடி சுழன்றுவிட்டு, தவ அபாங்கஸேதும் - உனது கடாக்ஷமாகிற அணையை (கரையை) மந்தம் - மெதுவாக, ஆலம்ப்ய - அடைந்து, ஆனந்ததி - ஆனந்தப்படுகிறது.

1. பரமசிவனுடைய பார்வையானது அம்பிகையின் முக காந்தியாகிற ஸமுத்திரத்தில் சுழன்று தத்தளித்து கடைசியாக கடாக்ஷமாகிற அணையை படைத்து கரையேறிக் களித்துக் கொண்டிருப்பதாக இதில் வர்ணிக்கப்பட்டது. புன்சிரிப்பை வெளுப்பாக வர்ணிப்பது ஸம்ப்ரதாயமாகையால் அதை இங்கு

அம்பாளுடைய முககாந்தியாகிற ஸமுத்திரத்திலுண்டாகும் நுரையாகசொல்லப்பட்டது.

(34) ஹே தேவி! காமாக்ஷி! திரிபுர ஸம்ஹாரியான பரமசிவனுடைய நேத்ரலக்ஷ்மியானவள், உனது புன்சிரிப்புக் கூட்டமாகிற நுரையுடன் கூடிய, உன் முககாந்தி ஸமுத்ரத்தில், உனது கடாக்ஷமாகிற அணையை மெதுவாக அவலம்பித்து கொண்டு, ஆனந்திக்கிறது.

35 श्यामा तव त्रिपुरसुन्दरि लोचनश्रीः
कामाक्षि कन्दलितमेदुरतारकान्तिः ।
ज्योत्स्नावती स्मितरुचापि कथं तनोति
स्पर्धामहो कुवलयैश्च तथा चकोरैः ॥

ச்யாமா தவ த்ரிபுரஸுந்தரி லோசனஸ்ரீ:
காமாக்ஷி கந்தளிதமேதுர தார காந்தி: |
ஜ்யோத்ஸ்னாவதீ ஸ்மிதருசாபி கதம் தனோதி
ஸ்பர்தாமஹோ குவலயைச்ச ததா சகோரை:॥

த்ரிபுரஸுந்தரீ காமாக்ஷி ஹே த்ரிபுரஸுந்தரீ! ஹே காமாக்ஷி! ச்யாமா - கருப்பானதும், கந்தளித மேதுர - மலர்ந்தும் ம்ருதுவானதுமான, தார காந்தி:- கருவிழியின் காந்தியையுடைய, தவ லோசனஸ்ரீ:- உனது பார்வையானது, ஸ்மிதருசா - உன் புன்சிரிப்பின் காந்தியினால், ஜ்யோத்ஸ்னாவதி அபி - நிலவோடு கூடியதாயிருந்தும், குவலயைச்ச - கருநெய்தல் புஷ்பங்களோடும், ததா - அதேமாதிரி, சகோரைச்ச - சகோர பக்ஷிகளோடும் கூட, ஸ்பர்தாம் - போட்டியை (சண்டையை), கதம் தனோதி - என்செய்கிறது? அஹோ - ஆச்சர்யம்!

1. ச்யமா என்ற பதமானது கருப்பு நிறத்தைத் தவிர இரவையும் குறிக்கும்.

2. இங்கு அம்பிகையின் கடாக்ஷத்தை சந்த்ரனுக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. தாரமென்ற பதமானது கண்ணின் கருவிழியைக் குறிப்பதுடன் நக்ஷத்திரத்தையும் குறிக்கும்.

3. சந்த்ரன் குவலயங்களை மலரச்செய்வதால் அவற்றிற்கு நண்பனாகச் சொல்லப்படுவான். சகோர பக்ஷிகள் நிலவையே பானம் பண்ணுகிறவையாகையால் அவற்றிற்கும் சந்த்ரன் நண்பனாகச் சொல்லப்படுவான். ஆகவே சந்த்ரனைப்போன்றதான அம்பிகையின் கடாக்ஷமானது குவலயங்களுடனும் நட்போடு இருக்க வேண்டியிருக்க அவற்றோடு பகை செய்ய வேண்டிய காரணமென்னவென்று கவியானவர் கேட்கிறார்.

4. உத்தம ஸ்திரீகளுடைய நேத்ரங்களுக்கு குவலயங்களை உவமமாகச் சொல்வதுடன் சகோர பக்ஷிகளின் நேத்ரங்களையும் ஒப்பிடுவது வழக்கம். ஆகவே அவற்றோடு போட்டி போடுவதாக அம்பிகையின் லோசனங்களைப்பற்றி இங்கு சொல்லப்பட்டது.

(35) த்ரிபுரஸுந்தரியான ஹே! காமாக்ஷி! கருத்ததும், மலர்ந்ததும், ம்ருதுவானதுமான குவலய காந்தியை உடைய உன்னுடைய கடாக்ஷ சோபையானது, உனது புன்சிரிப்பால் நிலவுடன் கூடியதாயிருந்த போதிலும், குவலய புஷ்பத்தோடும் சகோர பக்ஷியோடும் ஏன் சண்டை செய்கிறது? இது ஆச்சர்யம்.

36 कालाञ्जनं च तव देवि निरीक्षणं च
कामाक्षि साम्यसरणिं समुपैति कान्त्या ।
निःशेषनेत्रसुलभं जगतीषु पूर्वं
मान्यत्त्रिनेत्र सुलभं तुहिनाद्रिकन्ये ॥

காலாஞ்ஜனம் ச தவதேவி நிரீக்ஷணம் ச
காமாக்ஷி ஸாம்யஸரணிம் ஸமுபைதி
காந்த்யா ।
நி:சேஷ நேத்ர ஸுலபம் ஜகதீஷு பூர்வம்
அன்யத் த்ரிநேத்ர ஸுலபம் துஹினாத்ரி
கன்யே ॥

தேவி - தேவி!, காமாக்ஷி - ஹே காமாக்ஷி! துஹினாத்ரி கன்யே - ஹிமவானுடைய பெண்ணே!, காலாஞ்சனம் ச - கருப்புமையும், தவ நிரீக்ஷணம் ச - உனது பார்வையும், காந்த்யா -

காந்தியினால் (காந்தியில்) ஸாம்ய ஸரணிம்-ஸமமாயிருக்கும் தன்மையை, ஸமுபைதி - அடைந்திருக்கின்றன. ஆயினும், பூர்வம் - முதலில் சொல்லப்பட்ட காலாஞ்ஜனமானது, ஜகதீஷு லோகங்களில், நி:சேஷ நேத்ர ஸுலபம் - எல்லாருடைய நேத்ரங்களுக்கும் எளிதில் கிடைக்கக்கூடியது. அன்யத் - மற்றொன்றான உனது பார்வையானது, த்ரிநேத்ர ஸுலபம் - பரமசிவனுக்கு மாத்திரம் கிடைக்கக்கூடியதாயிருக்கிறது.

1. கடாக்ஷமானது கருப்பாயிருப்பதாக வர்ணிப்பதான கவிகளின் ஸம்ப்ரதாயத்தை அனுசரித்து இங்கு அதை காலாஞ்ஜனத்திற்கு ஸமமாகச் சொல்லப்பட்டது. ஆயினும் அவை யிரண்டிற்குமுள்ள ஒரு முக்யமான வித்யாஸமும் எடுத்துக் காட்டப்பட்டது. காலாஞ்ஜனமானது எல்லாருடைய கண்களிலும் இட்டுக்கொள்ளப்படுவதாகையால் அதை 'ஜகதீஷு நிச்சேஷநேத்ர ஸுலபம்' என்று சொல்லப்பட்டது. அம்பிகையின் கடாக்ஷமோ தன் பதியான பரமசிவனுக்கு மட்டுமே கிடைக்கப் பெறுமாதலால் 'த்ரிநேத்ர ஸுலபம், என்று சொல்லப்பட்டது. இப்படி பிறர் யாருக்கும் ஸுலபமாயில்லாமல் பரமசிவனுக்கு மட்டும் அம்பிகையின் கடாக்ஷமானது ஸுலபமாயிருப்பதால் அதற்குத்தனியான கௌரவம் இருக்கிறது- இதனால் அம்பிகைக்குத்தன் பதியிடமிருக்கும் ப்ரேமாதிசயமானது எடுத்துக்காட்டப் பட்டது.

(36) ஹிமவானுடைய பெண்ணாகிய ஹே தேவி! காமாக்ஷி! கருப்புமையும், உனது பார்வையும் காந்தியால் ஸமமாயிருக்கின்றன. ஆனால் முதலில் சொன்ன கருப்புமையானது உலகில் எல்லோருடைய நேத்ரங்களுக்கும் ஸுலபமாய் கிடைக்கக் கூடியது. மற்றொன்றான உனது கடாக்ஷமோ வென்றால் முக்கண்ணனுடைய மூன்று கண்களுக்கு மட்டும் ஸுலபமான தென்று நினைக்கிறேன்.

37 धूमाङ्कुरो मकरकेतनपावकस्य
कामाक्षि नेत्ररुचिनीलिमचातुरी ते ।

अत्यन्तमद्भुतमिदं नयनत्रयस्य
हर्षोदयं जनयते हरिणाङ्कमौलेः ॥

தூமாங்குரோ மகரகேதன பாவகஸ்ய
காமாக்ஷி நேத்ரருசி நீலிம சாதுரீ தே ।
அத்யந்தம் அத்புதம் இதம் நயனத்ரயஸ்ய
ஹர்ஷோதயம் ஜனயதே ஹரிணாங்க
மௌளே:॥

காமாக்ஷி - ஹேகாமாக்ஷி! மகரகேதன பாவகஸ்ய - மன்மதாக்னியின், தூமாங்குர: - புகைக்கொடி போன்றதான, தே - உன்னுடைய, நேத்ரருசி நீலிம சாதுரீ - நேத்ர காந்தியின் கருப்பின் அழகானது, ஹரிணாங்க மௌளே: - சந்திரனை சிரஸில் தரித்த பரமசிவனுடைய, நயனத்ரயஸ்ய-மூன்று கண்களுக்கும், ஹர்ஷோதயம் - ஆனந்தத்தின் புறப்பாட்டை, ஜனயதே-உண்டு பண்ணுகிறது. இதம் - இது, அத்யந்தம் அத்புதம் - மிகவும் ஆச்சரியம் !

1. புகையானது கண்களுக்கு கஷ்டத்தை உண்டுபண்ணுவது ஸாமான்யமாகத் தெரிந்திருக்கையில் இங்கு வர்ணிக்கப்பட்ட புகைக் கொடியானது பரமசிவனுடைய மூன்று நேத்ரங்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதாகச் சொல்வது மிகுந்த ஆச்சர்யமல்லவா !

2. புகையும் கடாக்ஷமும் கருப்புநிறம். புகையானது நீண்டு மெல்லியதாய் மேலே போவதால் அவை கொடிக்கு ஸமமாகச் சொல்வது கவிகளின் வழக்கம்.

3. மன்மதனுடைய ரதமானது மீனக்கொடிபோடிருப்பதாகச் சொல்லப்படுவதால் அவனுக்கு மீனகேதனன், மகரகேதனன், மகரத்வஜன் என்பதான பெயர்களுண்டு.

4. அம்பிகையானவள் மன்மத சாஸ்திரத்தின் பரமதாத்பர்யமாக இருப்பதாக அடிக்கடி வர்ணித்திருப்பதை அனுஸரித்து இங்கு மன்மதாக்னியின் தூமாங்குரம் (புகைக்கொடி) போலிருப்பதாக வர்ணிக்கப்பட்டது.

5 ஹரிணமென்றால் மானுக்குப் பெயர். சந்த்ரனில் தோன்றும் களங்கத்தை மானென்று சொல்வது கவிகளின் வழக்கம் ஆகவே சந்த்ரனுக்கு ஹரிணாங்கனென்று பெயர். அவனைப் பரமசிவன் தன்னுடைய மௌளியில் (சிரஸில்) தரித்திருப்பதால் அவருக்கு ஹரிணாங்க மௌளி என்று பெயர்.

(37) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷ சோபையின் கருப்பு வர்ணமானது, மன்தனை விற நெருப்பின் புகைபோலிருந்தும்கூட சந்திரசேகரனை பகவானுடைய மூன்று கண்களுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுக்கிறதென்பது மிகவும் அத்புதமாயிருக்கிறது.

38 आरम्भलेशसमये तव वीक्षणस्य
कामाक्षि मूकमपि वीक्षणमात्रनम्रम् ।
सर्वज्ञता सकललोकसमक्षमेव
कीर्तिः स्वयंवरणमाल्यवती वृणीते ॥

ஆரம்ப லேச ஸமயே தவ வீக்ஷணஸ்ய
காமாக்ஷி மூகமபி வீக்ஷணமாத்ர நம்ரம் |
ஸர்வக்ஞதா ஸகல லோக ஸமக்ஷமேவ
கீர்த்தி: ஸ்வயம்வரண மால்யவதீ வ்ருணீதே ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி !, வீக்ஷண மாத்ர நம்ரம் - உனது கடாக்ஷம் கிடைத்தால் போதுமென்று வணங்கியிருக்கும், மூகமபி - ஊமையாயிருப்பவனையும், தவ வீக்ஷணஸ்ய - உனது பார்வையின், ஆரம்ப லேச ஸமயே - ஆரம்பமான சிறியபொழுதிற்குள்ளே ஸர்வக்ஞதா - பூர்ணமான அறிவாகிற கன்யகையானவள், கீர்த்தி:- கீர்த்தியென்ற, ஸ்வயம் வரண மால்யவதீ - ஸ்வயம்வர மாலையை யுடையவளாய், ஸகலலோகஸமக்ஷமேவ - ஸகல லோகங்களுடைய முன்னிலையிலேயே, வ்ருணீதே - வரிக்கிறாள்.

1. அம்பிகையின் கடாக்ஷலேசம் பக்தன் மீது பட்ட மாத்ரத்திலேயே அவன் மூகனாயிருந்தாலும் ஸர்வக்ஞத்வம் என்ற கன்யகையானவள் கீர்த்தியென்ற மாலையும் கையுமாய் அவனைத் தானாகவே (ஸ்வயம்வரமாய்) ஸகல லோகங்களும் பார்த்திருக்கத் தன் பதியாக வரிக்கிறாள் என்று இதில் சொல்லப்பட்டது.

அதாவது அவனுக்கு ஸர்வக்ஞத்வமும் அதின் மூலமாக லோகோத்தரமான கீர்த்தியும் ஏற்படுவதாகச் சொல்லப்பட்டது.

(38) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷ வீக்ஷணத்தை மட்டும் வேண்டி வணங்கிய ஊமையனையுங்கூட, உனது கடாக்ஷம் விழ ஆரம்பிக்கும் ஸமயத்திலேயே ஸர்வக்ஞதை என்கிற கன்னிகையானவள், கீர்த்தியென்கிற ஸ்வயம்வர மாலையை உடையவளாய் எல்லா ஜனங்களின் முன்னிலையிலேயே வரிக்கிறாள்.

39 कालाम्बुवाह इव ते परितापहारी
कामाक्षि पुष्करमधः कुरुते कटाक्षः ।
पूर्वः परं क्षणरुचा समुपैति मैत्री-
मन्यस्तु संततरुचिं प्रकटीकरोति ॥

காலாம்புவாஹ இவதே பரிதாபஹாரீ
காமாக்ஷி புஷ்கரம் அத:குருதே கடாக்ஷ: |
பூர்வ:பரம் க்ஷணருசா ஸமுபைதி மைத்ரீம்
அன்யஸ்து ஸந்ததருசிம் ப்ரகடீகரோதி ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, தே கடாக்ஷ:- உனது கடாக்ஷமானது, காலாம்புவாஹ இவ - காளமேகம் போல பரிதாபஹாரீ- ஜனங்களுடைய தாபத்தைப் போக்கிக்கொண்டு, தே கடாக்ஷ:- உனது கடாக்ஷமானது, புஷ்கரம் - புஷ்கரத்தை (ஜலத்தை,) நீலோத்பலத்தை), அத: குருதே - கீழ்ப்படுத்திவிடுகிறது. ஆயினும், பூர்வ:- முந்திச் சொல்லப்பட்டதான காளமேகமானது, க்ஷணருசா - க்ஷணப்பொழுது ப்ரகாசிப்பதான மின்னலுடன், மைத்ரீம் ஸமுபைதி - ஸ்னேகபாவத்தை அடைகிறது. அன்யஸ்து - மற்றொன்றான உனது கடாக்ஷமானது, ஸந்ததருசிம் - எப்போதுமிருப்பதான காந்தியை, ப்ரகடீகரோதி - வெளிப்படுத்துகிறது.

1. இந்த ச்லோகத்தில் அம்பிகையின் கடாக்ஷத்தை காளமேகத்திற்கு ஸமமாகச் சொல்லிவிட்டு அதற்குமிதற்குமுள்ள வித்யாஸத்தையும் எடுத்துக் காட்டப்படுகிறது. மேகமானது தனது வர்ஷங்களினால் ஜனங்களுடைய தாபத்தைப் போக்கி

குளிரச்செய்கிறது. அம்பிகையின் பார்வையோ ஸகல லோகங்களுடைய (ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிகங்களென்கிற) தாபத்ரயத்தையும் போக்கடித்து அவர்கள் மனதைக் குளிரச் செய்யும் சக்திவாய்ந்தது.

2. மேகங்கள் ஸாதாரணமாய் கருப்பாயிருக்கையில் மின்னல் தோன்றும்போதெல்லாம் ப்ரகாசத்தோடு இருப்பதாகத் தோன்றும். ஆனால் மின்னலானது க்ஷணருசி - க்ஷணநேரம் காந்தியோடிருந்துவிட்டு மறைந்துவிடும். அம்பிகையின் கடாக்ஷமோ எப்போதும் காந்தியோடு கூடியதாயிருக்கிறது. ஆகவே அம்பிகையின் கடாக்ஷமானது காளமேகத்தையும் கீழ்படுத்தும்படியான அம்சம் வாய்ந்ததென்பதாக இதில் வர்ணிக்கப்பட்டது.

3. புஷ்கரமென்று ஜலத்திற்கும் நீலோத்பலத்திற்கும் பெயர். மேகமானது ஜலத்தை கீழே வர்ஷிப்பதால் 'புஷ்கரம் அத: குருதே' என்று சொல்லப்பட்டது. அம்பிகையின் கடாக்ஷமானது நீலோத்பலத்தை ஜயித்ததான அழகோடிருப்பதால் அதைக் கீழ்ப்படியச்செய்கிறது என்பதாக 'புஷ்கரம் அத:குருதே' என்று அதைப்பற்றியும் சொல்லப்பட்டது.

(39) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷமானது, காளமேகம்போல், ஜனங்களுடைய தாபத்தை நீக்குவதாயிருந்துகொண்டு நீலோத்பலத்தைக் கீழ்ப்படுத்துகிறது. ஆனால் முதலில் கூறப்பட்ட காளமேகமானது க்ஷணிகமான மின்னலுடன் ஸினேஹத்தை அடைகிறது. மற்றொன்றான உனது கடாக்ஷமானது சாச்வதமான காந்தியை வெளிப்படுத்துகிறது.

40 सूक्ष्मेऽपि दुर्गमतरेऽपि गुरुप्रसाद
साहाय्यकेन विचरन्नपवर्गमार्गे ।
संसारपङ्कनिचये न पतत्यमुं ते

ஸம்ஸார பங்க நிசயே ந பதத்யமும் தே
காமாக்ஷி காடம் அவலம்ப்ய கடாக்ஷயஷ்டிம்॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, ஸுதுர்கமேऽபி - மிகவும் நுண்ணியதாயிருந்த போதிலும், துர்கமதரேऽபி - செல்லமுடியாததாயிருந்தபோதிலும், அபவர்க மார்கே - மோக்ஷ மார்க்கத்தில், குருப்ரஸாத ஸாஹாய்யகேன - குருவின் அநுக்ரஹமென்ற துணையோடு, விசரன் - போய்க்கொண்டிருக்கிறவன், அமும் தே கடாக்ஷ யஷ்டிம் - இந்த உன்னுடையதான கடாக்ஷமென்ற ஊன்றுகோலை, காடம் அவலம்ப்ய - கெட்டியாக பிடித்துக்கொண்டு (போனால்), ஸம்ஸார பங்க நிசயே - ஸம்ஸார மென்ற சேற்றுக்கும்பலில், ந பததி - விழுகிறதில்லை.

(40) ஹே! காமாக்ஷி! எந்த மனிதனும், மிகவும் குறுகியதும், நடக்க முடியாததுமான, மோக்ஷமார்க்கத்தில், ஆசார்யகிருபையால் நடந்து கொண்டிருப்பவன், உனது இந்த கடாக்ஷமாகிற ஊன்றுகோலைப் பிடித்துக் கொண்டால், ஸம்ஸாரமாகிற சேற்றில் விழாமல் தப்புவான்.

41 कामाक्षि संततमसौ हरिनीलरत्न
स्तम्भे कटाक्षरुचिपुञ्जमये भवत्याः ।
बद्धोऽपि भक्तिनिगलैर्मम चित्तहस्ती
स्तम्भं च बन्धमपि मुञ्चति हन्त चित्रम् ॥

காமாக்ஷி ஸந்ததமஸௌ ஹரி நீலரத்ன
ஸ்தம்பே கடாக்ஷருசி புஞ்ஜமயே பவத்யா:।
பத்தோऽபி பக்தி நிகளைர் மம சித்தஹஸ்தீ
ஸ்தம்பம் ச பந்தமபி முஞ்சதி ஹந்த சித்ரம்॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, அஸௌ மம சித்தஹஸ்தீ - இந்த என்னுடைய மனமாகிற யானையானது, பவத்யா:- உன்னுடைய, கடாக்ஷருசி புஞ்ஜமயே - உன்னுடைய கடாக்ஷத்தின் காந்திக்கூட்டமென்ற, ஹரிநீல ரத்ன ஸ்தம்பே - இந்த்ர நீல ரத்ன ஸ்தம்பத்தில், பக்தி நிகளை:- பக்தியாகிற சங்கிலிகளால்,

ஸந்ததம் பத்தோபி — எப்போதும் கட்டப்பட்டிருந்த போதிலும், ஸ்தம்பம் ச - அந்த ஸ்தம்பத்தையும், பந்தம் அபி - அந்தக்கட்டையும், முஞ்சதி - விட்டுவிட்டு ஓடிப்போகிறது. ஹந்த சித்ரம் - என்ன ஆச்சர்யம்!

(41) ஹே! காமாக்ஷி! எனது மனஸ் என்கிற யானையானது உனது கடாக்ஷ காந்தி ஸமூஹமாகிற இந்திர நீல ரத்தக் கம்பத்தில், பக்தி என்கிற சங்கிலியால் கட்டப்பட்டிருந்த போதிலும், ஸ்தம்பத்தை (ஸ்தம்பித்திருத்தல்)யும், கட்டையும் (ஸம்ஸாரபந்தம்) விட்டு ஓடிவிட்டது. ஆச்சர்யம்!

42 कामाक्षि कार्ष्ण्यमपि संततमञ्जनं च
विभ्रन्निसर्गतरलोऽपि भवत्कटाक्षः ।
वैमल्यमन्वहमनञ्जनतां च भूयः
स्थैर्यं च भक्तहृदयाय कथं ददाति ॥

காமாக்ஷி கார்ஷ்ண்யமபி ஸந்ததம் அஞ்ஜனம் ச
பிப்ரன் நிஸர்க தரளோபி பவத் கடாக்ஷ: |
வைமல்யம் அன்வஹம் அனஞ்ஜனதாம் ச பூய:
ஸ்தைர்யம் ச பக்த ஹ்ருதயாய கதம் ததாதி ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! ஸந்ததம் - எப்போதும், கார்ஷ்ண்யம் அபி - கருப்பு நிறத்தையும், அஞ்ஜனம் ச - மையையும் பிப்ரன் - தரித்துக்கொண்டு, நிஸர்க தரள: அபி - இயற்கையாகவே சஞ்சலமாயிருப்பதுமான, பவத் கடாக்ஷ:- உனது கடாக்ஷமானது, பக்த ஹ்ருதயாய - பக்தர்களுடைய மனதிற்கு அன்வஹம் - எப்பொழுதும், வைமல்யம் - மாஸின்யமற்ற தன்மையை யும், அனஞ்ஜனதாம் ச - களங்கமில்லாமையையும், பூய:- இன்னும், ஸ்தைர்யம் ச - ஸ்திரமான நிலைமையையும், கதம் ததாதி - எப்படிக்கொடுக்கிறது!

1. கடாக்ஷமானது க்ருஷ்ண(கருப்பு) வர்ணமாகச் சொல்லப்படுவதால் அதற்கு கார்ஷ்ண்யமிருப்பதாகச் சொல்லப்பட்டது. பாபத்தைக் கருப்பு நிறமுள்ளதாக வர்ணிப்பது வழக்கம்.

2. கடாக்ஷமானது தான் கார்ஷ்ண்யத்தோடிருந்தாலும், பக்தர்களுடைய மனதில் கருப்பில்லாத நிர்மலமான (மைமல் யத்தை - மாலின்யமில்லாத தன்மையை - பாபமில்லாத நிர்மலமை) உண்டுபண்ணுகிறது. தான் அஞ்ஜனத்தை தரித்திருந்தாலும் பக்தர்களுடைய மனதை அஞ்ஜனமில்லாததாக களங்கமில்லாததாக) செய்துவிடுகிறது. மேலும் தான் சஞ்சல ஸ்வபாவத்தோடிருந்தபோதிலும் பக்தர்களுடைய மனதிற்கு ஸ்தைர்யத்தை (ஸ்திரமாயிருக்கும் தன்மையை — உறுதியான நிலையை) கொடுக்கிறது. ஆகவே கடாக்ஷமானது தனக்கிருக்கும் குண விசேஷங்களுக்கு மாறான பலன்களை பக்தர்களுக்குக் கொடுப்பதினால் அதில் தனக்கு உண்டாகும் ஆச்சர்யத்தை கவி இதில் வெளியிடுகிறார்.

(42) காமாக்ஷி! உனது கடாக்ஷமானது எப்போதும், கருத்ததாயும், மையை தரித்ததாயும், ஸ்வபாவத்திலேயே சஞ்சலமாயுமிருந்தபோதிலும், பக்தர்கள் ஹ்ருதயத்திற்கு, நித்யம், வெளுமையையும், களங்கமற்ற தன்மையையும் ஸ்திரமாயிருக்கும் தன்மையையும் எப்படிக் கொடுக்கிறதோ?

43 मन्दस्मितस्तबकितं मणिकुण्डलांशु-
स्तोमप्रवालरुचिरं शिशिरीकृताशम् ।
कामाक्षि राजति कटाक्षरुचेः कदम्ब-
मुद्यानमम्ब करुणा हरिणेक्षणायाः ॥

மந்தஸ்மித ஸ்தபகிதம் மணிகுண்டலாம்சு-
ஸ்தோம ப்ரவாள ருசிரம் சிசிரீக்ருதாசம் ।
காமாக்ஷி ராஜதி கடாக்ஷருசே: கதம்பம்
உத்யானமம்ப கருணா ஹரிணேக்ஷணாயா: ॥

காமாக்ஷி அம்ப - ஹே காமாக்ஷி! தாயே! மந்தஸ்மித ஸ்தபகிதம் - புன்சிரிப்பாகிற பூங்கொத்துக்களுள்ளதும், மணி குண்டலாம்சு ஸ்தோம - ரத்ன குண்டலங்களின் காந்திக் கூட்டங்களாகிற, ப்ரவாளருசிரம் - துளிர்களோடு அழகானதும், சிசிரீக்ருதாசம் - குளிரச்செய்யப்பட்ட திக்குகளையுடையதுமான

(என்றும் குளிர்ச்சியுடையதுமான), கடாக்ஷருசே: கதம்பம் - உனது கடாக்ஷத்தின் காந்திகளின் கூட்டமானது, கருணாஹரி ணேக்ஷணாயா: - கருணையென்ற ஸ்த்ரீயினுடைய, உத்யானம் - உத்யானமாக, ராஜதி விளங்குகிறது.

(43) தாயே! காமாக்ஷி! புன்சிரிப்பாகிற பூங்கொத்துள்ளதும், மணிமயமான குண்டலங்களின் காந்தியாகிற தளிரோடு கூடியதும் திசைகளைக் குளிரச் செய்வதுமான உனது கடாக்ஷ காந்தியினுடைய ஸமூஹமானது, கருணையென்கிற ஸ்திரீயினுடைய உத்யான வனம்போல் விளங்குகிறது.

44 कामाक्षि तावकटाक्षमहेन्द्रनील-
सिंहासनं श्रितवतो मकरध्वजस्य ।
साम्राज्यमङ्गलविधौ मणिकुण्डलश्री-
र्नीराजनोत्सवतरङ्गितदीपमाला ॥

காமாக்ஷி தாவக கடாக்ஷ மஹேந்த்ர நீல-
ஸிம்ஹாஸனம் ச்ரிதவதோ மகரத்வஜஸ்ய|
ஸாம்ராஜ்ய மங்கள விதௌ மணிகுண்டலஸ்ரீ:
நீராஜனோத்ஸவ தரங்கித தீபமாலா ll

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தாவக கடாக்ஷ - உனது கடாக்ஷமாகிற, மஹேந்த்ர நீல ஸிம்ஹாஸனம் - இந்த்ர நீலக் கல்லினாலான ஸிம்ஹாஸனத்தை, ச்ரிதவத :- அடைந்திருக்கும் (அதில் வீற்றிருக்கும்) மகர த்வஜஸ்ய - மன்மதனுக்கு, மணிகுண்டல ஸ்ரீ: - உனது ரத்ன குண்டலங்களின் காந்தியானது, ஸாம்ராஜ்ய மங்கள விதௌ - சக்ரவர்த்தியென்று பட்டாபிஷேகம் செய்யும் ஸமயத்தில், நீராஜனோத்ஸவ - தீப ஆலத்தி எடுப்பதின், தரங்கித தீப மாலா - அடுக்கு தீபமாக (ஆகிறது).

(44) ஹே காமாக்ஷி! உன் கடாக்ஷமாகிற இந்த நீலக்கல் மயமான ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்திருக்கிற மன்மதனுக்கு ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம் செய்கையில், உனது ரத்ன குண்டல தேஜஸ்ஸானது ஆலத்தியெடுப்பதற்கான தீப வரிசைபோல் விளங்குகிறது.

45 मातः क्षणं स्नपय मां तव वीक्षितेन
मन्दाक्षितेन सुजनैरपरोक्षितेन ।
कामाक्षि कर्मतिमिरोत्करभास्करेण
श्रेयस्करेण मधुपद्युतितस्करेण ॥

மாத: க்ஷணம் ஸ்னபய மாம் தவ வீக்ஷிதேன
மந்தாக்ஷிதேன ஸுஜனைரபரோக்ஷிதேன |
காமாக்ஷி கர்ம திமிரோத்கர பாஸ்கரேண
ச்ரேயஸ்கரேண மதுப த்யுதி தஸ்கரேண ||

மாத: காமாக்ஷி - தாயே! ஹே காமாக்ஷி! மந்தாக்ஷிதேன-ம்ருதுவானதும் (அல்லது நாணத்தோடு கூடியதும்), ஸுஜனை:-ஸாதுக்களால், அபரோக்ஷிதேன - பார்க்கப்பட்டதும் (அறியப் பட்டதும்), கர்மதிமிரோத்கர - கர்மங்களாகிற இருள் கூட்டத் திற்கு, பாஸ்கரேண - ஸூர்யன் போன்றதும், ச்ரேயஸ்கரேண - ச்ரேயஸ்ஸைக் கொடுப்பதும், மதுப த்யுதி தஸ்கரேண - வண்டுகளின் காந்தியை அபஹரித்ததுமான, தவ வீக்ஷிதேன - உனது பார்வையால், மாம் - என்னை, க்ஷணம் ஸ்னபய - ஒரு க்ஷணநேரமாவது நனையச்செய். (அப்பேர்ப்பட்ட உனது பார்வையை என்மீது ஒரு க்ஷணநேரமாவது படும்படி செய்வாயாக வும்.)

(45) மாதாவே! ஹே காமாக்ஷி! சிறிது நாணத்தோடு கூடியதும், ஸாதுக்களால் தர்சனம் செய்யப்பட்டதும், கர்ம மாகிற இருள் கூட்டத்திற்கு ஸூர்யன் போன்றதும், க்ஷேமத் தைக் கொடுப்பதும், வண்டுகளின் காந்தியை அபஹரிப்பதுமான உனது கடாக்ஷத்தினால் என்னை க்ஷண காலமாவது நனையச் செய்வாயாக.

46 प्रेमापगापयसि मज्जनमाचरय्य
युक्तः सितांशुकृत भस्मविलेपनेन ।
कामाक्षि कुण्डलमणिद्युतिभि र्जटालः
श्रीकण्ठमेव भजते तवदृष्टिपातः ॥

ப்ரேமாபகா பயஸி மஜ்ஜனம் ஆரசய்ய
யுக்த: ஸ்மிதாம்சு க்ருத பஸ்மவிலேபனேன।
காமாக்ஷி குண்டல மணி த்யுதிபிர் ஜடால:
ஸ்ரீ கண்டமேவ பஜதே தவத்ருஷ்டிபாத:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! தவ த்ருஷ்டிபாத:- உனது பார்வையானது, ப்ரேமாபகா பயஸி - ப்ரேமையென்ற நதி ஜலத்தில், மஜ்ஜனம் ஆரசய்ய - ஸ்நானம் செய்துவிட்டு, ஸ்மிதாம்சுக்ருத - உனது புன்சிரிப்பின் காந்திகளால் செய்யப்பட்ட, பஸ்மவிலேபனேன யுக்த - விபூதிப் பூச்சோடு கூடியதாய், குண்டல மணித்யுதிபி:- உனது குண்டலங்களிலுள்ள ரத்னங்களின் காந்திகளால், ஜடால:- ஜடையோடு கூடியதாய், ஸ்ரீகண்டமேவ பஜதே - பரமசிவனையே பஜிக்கிறது (அடைகிறது.)

1. தனது பதியான பரமசிவனிடம் அம்பிகையின் பார்வையானது எப்போதும் இருப்பது இதில் வர்ணிக்கப்பட்டது.

2. கடாக்ஷமானது பரமசிவனிடமே நிஷ்டையுடன் தபஸ் செய்யும் ரிஷியாகச் சொல்லப்பட்டது. ப்ரேமையாகிற நதி ஜலத்தில் மூழ்கி, புன்சிரிப்பாகிற பஸ்மத்தை அணிந்துகொண்டு மணி குண்டலங்களின் காந்திகளாகிற ஜடைகளோடு கூடிய அந்த ரிஷியானவர் ஸதாகாலமும் பரமசிவனை பஜித்துக்கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது.

3. புன்சிரிப்பை வெளுப்புநிறமாக வர்ணிப்பது கவிகளின் ஸம்ப்ரதாயமாதலால் இங்கு பஸ்மத்திற்கு (விபூதிக்கு) ஸமமாகச் சொல்லப்பட்டது.

(46) ஹே காமாக்ஷி ! உனது கடாக்ஷமானது, ப்ரீதியென்கிற நதி ஜலத்தில் ஸ்நானம் செய்துவிட்டு, வெளுப்பான புன்சிரிப்பாகிற விபூதியை தரித்துக்கொண்டு, உனது காது குண்டலத்தின் ரத்ன காந்திகளால் ஜடையை தரித்து இருப்பதுபோல் விளங்கிக்கொண்டு பரமசிவனையே ஸேவிக்கிறது.

47 कैवल्यदाय करुणारसकिंकराय
कामाक्षि कन्दलित विभ्रमशंकराय।
आलोकनाय तव भक्तशिवंकराय
मातर्नमोऽस्तु परतन्त्रितशंकराय॥

கைவல்யதாய கருணாரஸ கிங்கராய
காமாக்ஷி கந்தளித விப்ரம சங்கராய |
ஆலோகனாய தவ பக்த சிவங்கராய
மாதர் நமோ⁵ஸ்து பரதந்த்ரித சங்கராய ||

காமாக்ஷி மாத: - ஹே காமாக்ஷி தாயே! கைவல்யதாய - கைவல்யமென்ற உத்க்ருஷ்டமான மோக்ஷத்தைக் கொடுப்பதும், கருணாரஸ கிங்கராய - கருணையென்ற கிங்கரியுடையதும், கந்தளித விப்ரம சங்கராய - சங்கருக்கு மோஹலீலையை அபி விருத்தி செய்வதும், பக்த சிவங்கராய - பக்தர்களுக்கு மங்களத்தைச் செய்வதும், பரதந்த்ரித சங்கராய - பரமசிவனை பரவசப் படுத்தியதுமான (தன் வசப்படுத்தியதுமான), தவ ஆலோகனாய - உனது பார்வைக்கு, நம: அஸ்து - நமஸ்காரம் இருக்கட்டும்.

(47) தாயே! காமாக்ஷி! கைவல்யமென்கிற மோக்ஷத்தைக் கொடுப்பதும் கருணாரஸமென்கிற கிங்கரியுடையதும், சங்கருக்கு மோஹ லீலையை விருத்திசெய்வதும், பக்தர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பதும், பரமசிவனை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளுவதுமான உனது கடாக்ஷத்திற்கு நமஸ்காரம்.

48 साम्राज्य मङ्गलविधौ मकरध्वजस्य
लोलालकालिकृततोरणमाल्यशोभे ।
कामेश्वरी प्रचलदुत्पलवैजयन्ती-
चातुर्यमेति तव चञ्चलदृष्टिपातः ॥

ஸாம்ராஜ்ய மங்கள விதௌ மகரத்வஜஸ்ய
லோலாளகாளிக்ருத தோரண மால்ய சோபே |
காமேச்வரி ப்ரசலத் உத்பல வைஜயந்தி-
சாதுர்யம் ஏதி தவ சஞ்சல த்ருஷ்டி பாத:||

காமேச்வரி - காமேச்வரருடைய பத்னியே! லோலாள காளிக்ருத - ஆடுகின்ற அளகங்களின் வரிசைகளாலான, தோரண மால்ய சோபே - தோரணமாலைகளின் காந்தியோடுகூடிய, மகரத்வஜஸ்ய-மன்மதனுடைய, ஸாம்ராஜ்ய மங்களவிதௌ-சக்ரவர்த்தி

பென்ற பட்டாபிஷேகத்தின் போது, தவசஞ்சல த்ருஷ்டி பாத: - உனது சஞ்சலமான பார்வையானது ப்ரசலத் - அசைந்தாடும், உத்பல வைஜயந்தி நீலோத்பல மாலைகளின், சாதுர்யம் ஏதி - அழகை அடைகிறது.

(48) பரமேச்வரனின் பத்நியான காமாக்ஷியே! அசைகிற அளகங்களின் வரிசைகளாகிற தோரண மாலையின் காந்தியுடன் கூடியதும், மன்மதனுடைய ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகத்தின் போது, உனது சஞ்சலமான கண்பார்வையானது, அசைந்தாடும் நீலோத்பல மாலைகளின் அழகை அடைகிறது.

49 मार्गेण मञ्जुकचकान्तितमोवृतेन
मन्दायमानगमना मदनातुरासौ ।
कामाक्षि दृष्टिरयते तव शंकराय
संकेतभूमिमचिरादभिसारिकेव ॥

மார்கேண மஞ்ஜு கச காந்தி தமோவ்ருதேன
மந்தாயமான கமனு மதனுதுராஸௌ |
காமாக்ஷி த்ருஷ்டி ரயதே தவ சங்கராய
ஸங்கேத பூமிம் அசிராத் அபிஸாரிகேவ ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! அஸௌ தவ த்ருஷ்டி: - இந்த உனது பார்வையானது, மதனுதுரா - மன்மதனுல் பீடிக்கப்பட்டு, மஞ்ஜு கச காந்தி - அழகிய கூந்தலின் காந்தியாகிற, தமோ வ்ருதேன - இருட்டால் சூழப்பட்ட, மார்கேண - வழியாக, மந்தாயமான கமனு - மெதுவான நடையையுடையதாய், சங்கராய - பரமசிவனுக்கு (பரமசிவனை உத்தேசித்து), அசிராத் - சீக்ரத்தில், ஸங்கேதபூமிம் - ஸங்கேத ஸ்தலத்திற்கு, அபிஸாரிகேவ- அபிஸாரிகைபோல், அயதே - செல்கிறது.

ஒரு ரஹஸ்ய ஸ்தலத்தில் சேருவதாகத் தன் நாயகனுடன் ஏற்பாடு செய்துகொண்டு அந்த இடத்தை நோக்கிச் செல்லும் காமபீடிதையான ஸ்திரீக்கு அபிஸாரிகையென்று பெயர். அவ்விதம் சேர ஏற்பாடுசெய்யப்பட்ட இடத்திற்கு ஸங்கேத பூமி (ஸங்கேத ஸ்தலம்) என்று பெயர். அவ்விதமான இடங்களுக்கு

பிறர் அறியாதபடி இருட்டில் போவது வழக்கமானதைபால் இங்கு அம்பாளுடைய த்ருஷ்டியான அபிஸாரிகையானவள் போகும் வழியானது அம்பாளுடைய கறுத்த கூந்தலினால் ஏற்பட்ட இருட்டோடு இருப்பதாகச் சொல்லப்பட்டது. அவ்விதமான இருட்டில் போவதினால் மெதுவான நடையோடு போவதாயும் நாயகனைச் சேரவேண்டுமென்று மதனுதுரையாயிருப்பதால் வேகமாகச் செல்ல ஆசையோடிருப்பதை 'அஸிராத் அபதே' என்று சொல்லப்பட்டது.

(49) ஹே காமாக்ஷி! இந்த உனது கடாக்ஷமானது,மன்மதனால் பிடிக்கப்பட்டதாகக்கொண்டு, அழகிய கூந்தலின் காந்தியாகிற இருட்டால் சூழப்பட்ட வழியாக, மெதுவான நடையுடன் அபிஸாரிகையைப்போல், பரமசிவனையுத்தேசித்து ஒரு ஸங்கேத ஸ்தலத்திற்குச் செல்லுகிறது போலிருக்கிறது.

50 व्रीडानुवृत्तिरमणीकृतसाहचर्या
शैवालितां गलरुचा शशिशेखरस्य ।
कामाक्षि कान्तिसरसीं त्वदपाङ्गलक्ष्मी-
र्मन्दं समाश्रयति मज्जनखेलनाय ॥

வ்ரீடானு வ்ருத்தி ரமணீக்ருத ஸாஹசர்யா
சைவாலிதாம் களருசா சசிசேகரஸ்ய |
காமாக்ஷி காந்திஸரஸீம் த்வத் அபாங்கலக்ஷ்மீ:
மந்தம் ஸமாச்ரயதி மஜ்ஜன கேலனாய ll

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! த்வத் அபாங்கலக்ஷ்மீ:- உனது கடாக்ஷ லக்ஷ்மியானவள், வ்ரீடானு வ்ருத்திரமணீ - வ்ரீடை (லஜ்ஜை) என்ற தோழிப்பெண்ணுடன், க்ருத ஸாஹசர்யா-கூடியவளாய் (உடன் வரப்பட்டவளாய்), மஜ்ஜன கேலனாய-ஜலக்ரீடையை உத்தேசித்து, சசிசேகரஸ்ய-சந்த்ர சேகரருடைய, களருசா-கழுத்தின் காந்தியினால், சைவாலிதாம் - பாசிபடர்ந்தது போலிருக்கும், காந்தி ஸரஸீம்-காந்தியாகிற குளத்தை, மந்தம் ஸமாச்ரயதி-மெதுவாக அடைகிறாள்.

பரமசிவனுடைய கழுத்தானது அவர் சாப்பிட்ட ஹாலாஹல விஷம் அங்கு தங்கிவிட்டதால் நீலநிறமாக இருப்பதாகச் சொல்லப்படும். (அதினால் அவருக்கு நீலகண்டனென்றும், காளகண்டனென்றும் பெயர்கள் ஏற்பட்டன.) ஆகவே அவருடைய முககாந்தியாகிற ஸரஸுக்கு கழுத்திலிருக்கும் கருப்பானது பாசி படர்ந்தது போலிருப்பதாகச் சொல்லப்பட்டது. அப்பேர்ப்பட்ட ஸரஸில் ஜலக்ரீடை செய்வதற்காக அம்பாளுடைய கடாக்ஷமாகிற ஸ்திரீயானவள், லஜ்ஜையென்ற ஸகியுடன் மெதுவாகச் செல்லுவதாக இங்கு வர்ணிக்கப்பட்டது.

(50) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷ லக்ஷ்மீயானவள் லஜ்ஜையென்கிற தோழியுடன் கூடியவளாய், ஜலக்கிரீடையை உத்தேசித்து, பரமசிவனுடைய கழுத்து சோபையால் பாசி படர்ந்தது போலிருக்கிற காந்தியாகிற குளத்தை மெதுவாக அடைகிறாள்.

51 काषायमंशुकमिव प्रकटं दधानो
माणिक्यकुण्डलरुचिं ममताविरोधी ।
श्रुत्यन्तसीमनि रतः सुतरां चकास्ति
कामाक्षि तावककटाक्षयतीश्वरोऽसौ ॥

காஷாயம் அம்சுகமிவ ப்ரகடம் ததானோ
மாணிக்ய குண்டலருசிம் மமதாவிரோதி |
ச்ருத்யந்த ஸீமனி ரத: ஸுதராம் சகாஸ்தி
காமாக்ஷி தாவக கடாக்ஷ யதீச்வரோऽஸௌ ॥

காமாக்ஷி-ஹே காமாக்ஷி! அஸௌ-இந்த, தாவக கடாக்ஷ யதீச்வர:- உனது கடாக்ஷமாகிற யதிச்ரேஷ்டரானவர், மாணிக்ய குண்டல ருசிம்-உனது ரத்ன குண்டலங்களின் காந்தியை, காஷாயம் அம்சுகமிவ-காஷாய வஸ்த்ரம் போல், ப்ரகடம் ததான:- நன்றாய் தெரியும்படி தரித்துக்கொண்டு, மமதா விரோதி - மமதையென்ற பாவத்திற்கு விரோதியாக, ச்ருத்யந்த ஸீமனி ரத:- வேதாந்தங்களில் ஈடுபட்டவராய், ஸுதராம் சகாஸ்தே-அதிகமாய் விளங்குகிறார்.

இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை ஒரு யதீச்வரருக்கு ஸமானமாக வர்ணிக்கப்படுகிறது. யதிகள் வழக்கமாக தரிக்கும் காஷாய வஸ்த்ரத்திற்கு ஸமானமாய் அம்பிகையின் ரத்ன குண்டலங்களின் காந்தி இருக்கிறதாம். ச்ருத்யந்தம் என்றால் ச்ருதிகளின் அந்தம்-வேதாந்தம், அதாவது, உபநிஷத்துக்கள் என்று ஒரு அர்த்தம். ச்ருத்யந்தம் என்றால் காது வரையில் என்று மற்றொரு அர்த்தம். அம்பிகையின் கண்கள் காதுவரை நீண்டிருப்பதால் 'ச்ருத்யந்த ஸீமனி ரத:' என்று சொல்லப்பட்டது. யதிகள் வேதாந்த விசாரத்தில் ஈடுபட்டிருப்பார்களாகையால் 'ச்ருத்யந்த ஸீமனி ரத:' என்பது அந்த அர்த்தத்திலும் பொருத்தமாக இருக்கிறது

(51) ஹே காமாக்ஷி! உன்னுடைய கடாக்ஷமாகிற ஸன்யாஸிச்ரேஷ்டர் உனது ரத்ன குண்டலங்களுடைய சிவந்த காந்தியினால் காஷாயவஸ்திரம் தரித்தவர்போல், மமதை என்ற எண்ணத்திற்கு விரோதியாயிருந்து கொண்டு ச்ருதியந்தமென்கிற வேதாந்தத்தின் எல்லையில் (காதுகளின் எல்லையில்) ஈடுபட்டவராக மிகவும் விளங்குகிறார்.

52 पाषाण एव हरिनीलमणिर्दिनेषु
प्रम्लानतां कुवलयं प्रकटीकरोति ।
नैमित्तिको जलदमेचकिमा ततस्ते
कामाक्षि शून्यमुपमानमपाङ्गलक्ष्म्याः ॥

பாஷாண ஏவ ஹரி நீலமணிர் திநேஷு
ப்ரம்லான தாம் குவலயம் ப்ரகடீ கரோதி |
நைமித்திகோ ஜலத மேசகிமா ததஸ்தே
காமாக்ஷி சூன்யமுபமானம் அபாங்கலக்ஷ்ம்யா: ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! ஹரி நீல மணி: - இந்த்ர நீல ரத்னமானது, பாஷாண ஏவ - கேவலம் கல்லேதவிர வேறல்ல. குவலயம் - கருநெய்தல் புஷ்பமோ, திநேஷு - பகற்காலங்களில் ப்ரம்லானதாம் - வாட்டத்தை, ப்ரகடீ கரோதி - காட்டுகிறது,

இந்த மேசமோ - மேகத்தின் கருமையானது, நைமித்திக: - எப்பொழுதாவது ஏற்படக்கூடியதாயிருக்கிறது. தத: - ஆகையால், தே அபாங்க ஸுஷம்யா: - உனது கடாக்ஷத்தின் அழகிற்கு, உபமானம் - ஸமமான வஸ்து, சூன்யம் - யாதொன்றுமில்லை.

அம்பிகையின் கடாக்ஷத்திற்கு ஸமமாகச் சொல்லக்கூடிய வஸ்துக்கள் மூன்று - இந்த்ர நீலமணி, குவலயம், மேகம். ஆயினும் இவை மூன்றிலுள்ள குறைகளை எடுத்துக்காட்டி அவை அம்பிகையின் கடாக்ஷத்திற்கு ஸமானமல்லவென்று நிரூபித்து அம்பிகையின் கடாக்ஷ லக்ஷ்மியானது உபமானமற்றது (நிகரற்றது) என்று வர்ணிக்கப்பட்டது.

(52) ஹே காமாக்ஷி! உன்னுடைய கடாக்ஷ சோபைக்கு உபமானம் இல்லை. இந்திர நீலமணியோ, வெறும் கல்லு. குவலய புஷ்பமோ வெயில் பகலில் வாடிவிடுகிறது. மேகத்தின் கருமையோ வென்றால், எப்போதாவது ஒரு ஸமயத்தில் தான் ஏற்படக்கூடியதாயிருக்கிறது.

58 शृङ्गारविभ्रमवती सुतरां सलज्जा
नासाग्रमौक्तिकरुचा कृतमन्दहासा ।
श्यामा कटाक्षसुषमा तव युक्तमेत-
त्कामाक्षि चुम्बति दिगम्बरवक्त्रबिम्बम् ॥

ச்ருங்கார விப்ரமவதீ ஸுதராம் ஸலஜ்ஜா
நாஸாக்ர மௌக்திகருசா க்ருத மந்தஹாஸா ।
ச்யாமா கடாக்ஷ ஸுஷமா தவ யுக்தம் ஏதத்
காமாக்ஷி சும்பதி திகம்பர வக்த்ர பிம்பம் ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தவ கடாக்ஷ ஸுஷமா - உனது கடாக்ஷத்தின் ஸௌந்தர்யமாகிற, ச்யாமா - கருப்பான நிறத்தையுடைய ஸ்த்ரீயானவள் (ஸரியான யௌவனத்தோடு கூடிய ஸ்திரீயானவள்), ஸுதராம் - அதிகமாய், ச்ருங்கார விப்ரமவதீ - ச்ருங்கார விலாசத்தோடு கூடியவளாயும், ஸ லஜ்ஜா - நாணத்தோடு கூடியவளாயும், நாஸாக்ர மௌக்திக ருசா - மூக்கின்

நுனியிலிருக்கும் (மூக்குத்தி) முத்துனுடைய காந்தியால், ச்ருத மந்தஹாஸா - புன்சிரிப்போடு கூடியவளாயும், திகம்பர வஸ்த்ர பிம்பம் - (திக்குக்களையே வஸ்த்ரமாக உடைய) பரமசிவனுடைய முக பிம்பத்தை, சும்பதி - முத்தமிடுகிறான்.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை ஒரு ஸரிபான யௌவனத்தையுடைய ஸ்த்ரீக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. மூக்குத்தியிலுள்ள முத்தானது வெளுப்பாயிருக்குமாதலால் அதினுடைய மந்தஹாஸமாகச் சொல்லப்பட்டது.

2. பரமசிவன் ச்மசான வாஸியாய் வஸ்த்ரமில்லாமல் திரிந்துகொண்டிருப்பதாகச் சொல்லப்படுவதால் அவரை இங்கு திகம்பரர் (திக்குகளையே வஸ்த்ரமாக உடையவர் என்று வர்ணிக் கப்பட்டது.) அம்பிகையின் பார்வையானது எப்போதும் அவர் மீது இருப்பதால் அவருடைய முக பிம்பத்தை அம்பிகையின் கடாக்ஷமானது முத்தமிட்டிருப்பதாக இங்கு வர்ணிக்கப்பட்டது.

(53) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷ காந்தியாகிற யௌவன ஸ்திரீயானவள், சிருங்கார விலாஸத்தோடும், நாணத்தோடும் கூடியவளாய், மூக்குநுனியிலிருக்கிற மூக்குத்தி முத்துனுடைய காந்தியால் மந்தஹாஸம் செய்கிறவள் போலி ருந்து கொண்டு திகம்பரனுக விளங்கும் பரமசிவனுடைய முக பிம்பத்தை முத்தமிடுகிறாள் என்பது பொருத்தமானதே!

54 नीलोत्पलेन मधुपेन च दृष्टिपातः
कामाक्षि तुल्य इति ते कथमामनन्ति ।
शैत्येन निन्दति यदन्वहमिन्दुपादा-
न्पाथोरूहेण यदसौ कलहायते च ॥

நீலோத்பலேன மதுபேன ச த்ருஷ்டிபாத:
காமாக்ஷி துல்ய இதி தே கதம் ஆமனந்தி |
சைத்யேன நிந்ததி யதன்வஹம் இந்து பாதான்
பாதோருஹேண யதஸௌ கலஹாயதே ச ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே த்ருஷ்டி பாத: - உனது பார்வையானது, நீலோத்பலேன - கருநெய்தல் புஷ்பத்திற்கும், மதுபேனச வண்டிற்கும், துல்ய இதி - ஸமமானதென்று, கதம் ஆமனந்தி - எப்படி (லோகத்தில்) சொல்லுகிறார்கள்? யத் அஸௌ - எந்த இந்த கடாக்ஷமானது, அன்வஹம் - எப்போதும், சைத்யேன - குளிர்ச்சியினால், இந்து பாதான் - சந்த்ரனுடைய கிரணங்களை, நிந்ததி - பழிக்கிறதோ, யத் - எந்த கடாக்ஷமானது, பாதோருஹேண ச - தாமரை புஷ்பத்தோடும் கலஹாயதே - சண்டையிடுகிறதோ.

(54) ஹே காமாக்ஷி! உனது கடாக்ஷமானது நீலோத்பல புஷ்பத்திற்கும் வண்டுக்கும் ஸமமென்று எப்படிச் சொல்லுகிறார்களோ தெரியவில்லை? ஏனெனில் உனது கடாக்ஷமானது எப்போதும் தனது குளிர்ச்சியால் சந்திரகிரணங்களை திரஸ்கரிக்கிறது. தாமரைப்புஷ்பத்துடன் எப்போதும் சண்டையிட்டுக் கொண்டுமிருக்கிறதே.

1. அம்பிகையின் கடாக்ஷத்திற்கு உபமானமாக நீலோத்பலத்தையும் வண்டையும் லோகத்தில் சொல்லுகிறார்களே, அப்படியிருக்கையில் நீலோத்பலத்திற்கு (அதை மலரச் செய்வதினால்) நண்பனான சந்த்ர கிரணங்களோடும், வண்டுகளுக்கு நண்பனான தாமரை புஷ்பத்திற்கும் விரோதியாக அம்பிகையின் கடாக்ஷமானது இருந்து வருவது ஏன் என்று கவி ஆச்சர்யப்படுகிறார்.

2. சந்த்ர கிரணங்கள் மிகவும் குளிர்ச்சியுள்ளவையென்பது லோக ப்ரஸித்தம். ஆயினும் அம்பிகையின் கடாக்ஷமானது பக்தர்களுடைய தாபத்ரயத்தையும் போக்கடிப்பதால் சரீர தாபத்தை மட்டும் போக்கடிக்கும் சந்த்ர கிரணங்களைவிட ச்ரேஷ்டமானவையென்று ஏற்படுகிறது. திரும்பவும் தாமரை புஷ்பத்தைவிட அம்பிகையின் கடாக்ஷமானது அழகிலும் மார்தவத்திலும் ச்ரேஷ்டமானவை. ஆகையால் அவ்விரண்டுடனும் கடாக்ஷமானது எப்போதும் சண்டைபோட்டு ஜயிப்பதாக இங்கு வர்ணிக்கப்பட்டது.

55 ओष्ठप्रभापटलविद्रुममुद्रिते ते
भ्रूवल्लीवीचिसुभगे मुखकान्तिसिन्धौ ।

कामाक्षि वारिभरपूरणलम्बमान-
कालाम्बुवाहसरणिं लभते कटाक्षः ॥

ஓஷ்ட ப்ரபா படல வித்ரும முத்ரிதே தே
ப்ரூவல்லிவீசி ஸுபகே முககாந்தி ஸிந்தௌ
காமாக்ஷி வாரி பர பூரண லம்ப மான-
காலாம்புவாஹ ஸரணிம் லபதே கடாக்ஷ॥:

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! தே கடாக்ஷ: - உனது கடாக்ஷமானது, ஓஷ்ட ப்ரபா படல - உதடுகளின் காந்திகளாகிற, வித்ரும முத்ரிதே - பவழக் கொடிகளையுடையதும், ப்ரூவல்லி - புருவக்கொடிகளாகிற, வீசி ஸுபகே - அலைகளோடு விளங்குவதுமான, முக காந்தி ஸிந்தௌ - உனது முக காந்தியாகிற ஸமுத்ரத்தில், வாரி பர பூரண லம்பமான - தண்ணீரை நிரப்பிக் கொள்வதற்காக (குடிப்பதற்காக) தழைந்திருக்கும், காலாம்பு வாஹ ஸரணிம் - காளமேகங்களின் வரிசையென்ற நிலைமையை, லபதே - அடைகிறது.

(55) ஹே ! காமாக்ஷியே ! உனது கடாக்ஷமானது, உதடு காந்தி ஸமூஹமாகிற பவழத்தால் சோபிக்கிறதும், புருவக் கொடியாகிற அலைகளுடன் விளங்குவதுமான முகதேஜஸ்ஸாகிற ஸமுத்ரத்தில், ஜலத்தைப் பானம் பண்ணிய கருமேகம் வரிசை போல் சோபிக்கிறது.

உதடுகள் சிகப்பு நிறமாதலால் அவற்றை பவழக்கொடிக்கு ஸமமாகச் சொல்வது கவிகளின் ஸம்ப்ரதாயம்.

56 मन्दस्मितैर्धवलिता मणिकुण्डलांशु
संपर्कलोहितरुचिस्त्वदपाङ्गधारा ।
कामाक्षि मल्लिकुसुमैर्नवपल्लवैश्च
नीलोत्पलैश्च रचितेव विभाति माला ॥

மந்த ஸ்மிதைர் தவளிதா மணிகுண்டலாம்சு-
ஸம்பர்க்க லோஹித ருசிஸ் த்வத் அபாங்க
தாரா |

**காமாக்ஷி மல்லி குஸுமைர் நவபல்லவைச்ச நீலோத்பலைச்ச ரசிதேவ விபாதி மாலா ।**

*காமாக்ஷி - ஹே காமாக்ஷி! மந்தஸ்மிதை - உனது புன் சிரிப்புகளால், தவளிதா - வெண்மையான நிறத்தோடிருக்கச் செய்யப்பட்டதும், மணிகுண்டலாம்சு ஸம்பர்க்க - உனது ரத்ன குண்டலங்களுடைய காந்தியின் சேர்க்கையினால், லோஹிதருசி: சிவப்பு நிறத்தோடு கூடியதுமான, த்வத் அபாங்க தாரா - உனது கடாக்ஷத்தின் பெருக்கானது, மல்லி குஸுமை: - மல்லிகைப் புஷ்பங்களாலும், நவ பல்லவைச்ச - புதிதான துளிர்களாலும், நீலோத்பலைச்ச - நீலோத்பலங்களாலும், ரசிதா மாலா இவ - செய்யப்பட்ட (தொடுக்கப்பட்ட) மாலைபோல், விபாதி விளங்குகிறது.*

(56) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷ வரிசையானது, மந்தஸ்மிதத்தால் வெளுப்பானதாயும், ரத்னகுண்ட தேஜஸ்சேர்க்கையால் சிவப்பாயும் இருப்பதால் மல்லிகைப்பூ மாந்தளிர் நீலோத்பலம் ஆகியவைகளால் தொடுக்கப்பட்ட மாலைபோல் விளங்குகிறது.

கடாக்ஷத்தை கருப்பு நிறமாக வர்ணிப்பது வழக்கமாகையால் அதை நீலோத்பலத்திற்கு ஸமமாகவும், மந்தஸ்மிதத்தை வெளுப்பாக வர்ணிப்பது வழக்கமாகையால் அதை மல்லிகை புஷ்பத்திற்கு ஸமமாகவும், ரத்னங்களைப் பொதுவாக வர்ணிக்கும்போது சிகப்பு நிறமாக வர்ணிப்பது வழக்கமாகையால் அவற்றின் காந்தியை நவ பல்லவங்களுடைய சிகப்பு நிறத்திற்கு ஸமமாகவும் இங்கு சொல்லப்பட்டது ஆகவே தனக்கு ஸ்வபாவமாக உடைய கருப்பு நிறத்தோடு மந்தஸ்மிதத்தின் வெளுப்பு, மணி குண்டலங்களின் ரத்னங்களுடைய சிகப்பு, இவற்றோடுகூடிய அம்பிகையின் கடாக்ஷ பரம்பரையை மல்லிகை நவ பல்லவ, நீலோத்பலம் இவற்றால் தொடுக்கப்பட்ட மாலைக்கு உபமானமாகச் சொல்லப்பட்டது.

6[illegible] कामाक्षि शीतलकृपारसनिर्झराम्भ
संपर्कपक्ष्मलरुचिस्त्वदपाङ्गमाला ।
गोभिः सदा पुररिपोरभिलष्यमाणा
दूर्वाकदम्बक विडम्बनमातनोति ॥

காமாக்ஷி சீதள க்ருபாரஸ நிர்ஜராம்ப:
ஸம்பர்க்க பக்ஷ்மலருசிஸ் த்வத் அபாங்கமாலா।
கோபி: ஸதா புரரிபோ: அபிலஷ்யமாணு
தூர்வா கதம்பக விடம்பனம் ஆதனோதி ॥

*காமாக்ஷி - ஹே காமாக்ஷி! த்வத் அபாங்கமாலா - உனது கடாக்ஷத்தின் வரிசையானது, சீதள - குளிர்ந்ததான, க்ருபாரஸ உனது க்ருபாரஸமென்ற, நிர்ஜராம்ப: - நீர்வீழ்ச்சியின் ஜலத்தின், ஸம்பர்க்கபக்ஷ்மலருசி: - ஸம்பந்தத்தால் செழிப்பாயிருப்பதும், ஸதா - எப்பொழுதும். புரரிபோ: - பரமசிவனுடைய, கோபி: அபிலஷ்யமாணு - கண்களால் விரும்பப்பட்டதுமான, தூர்வா கதம்பக - அருகம்புல்லின் கூட்டத்தினுடைய (வனத்தினுடைய,) விடம்பனம் ஆதனோதி - ஸாம்யத்தை (அதைப் போலிருக்கும் தன்மையை) அடைகிறது.*

(57) ஹே! காமாக்ஷி! உனது கடைக்கண்வரிசையானது, சீதளமான உனது கிருபையாகிற ஜலத்தால் செழித்ததாயும் திரிபுர ஸம்ஹாரியான சிவனுடைய கண்களால் (பசுக்களால்) எப்போதும் ஆசைப்படக் கூடியதுமான அருகம்புல்லின் ஸமத்வத்தை அடைகிறது.

இதில் அம்பிகையின் கடாக்ஷ மாலை ஒரு அருகம் புல் கூட்டத்திற்கு, ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. ரஸமென்றால் ஜலமென்றும் அர்த்தம். கோ என்றால் கண்ணைக்குறிப்பதுடன் பசுவையும் குறிக்கும். கடாக்ஷமானது சீதளமான கருணா ரஸம் பாய்வதினால் செழிப்பாயும் எக்காலமும் பரமசிவனுடைய கோக்களால் (கண்களால்) விரும்பப்பட்டதாயுமிருப்பதால், ஸதா விழுந்து கொண்டிருக்கும் நீர்வீழ்ச்சியின் அருகிலிருப்பதால் செழுமையாயும் கோக்களால், (பசுக்களால்) ஸதாகாலமும் விரும்பப்படுவதுமான அருகம்புல் வனத்திற்கு கடாக்ஷ மாலை ஒப்பிடப்பட்டது.

58 हृत्पङ्कजं मम विकासयतु प्रमुष्ण-
न्नुल्लासमुत्पलरुचेस्तमसां निरोद्धा।
दोषानुषङ्गजडतां जगतां धुनानः
कामाक्षि वीक्षणविलासदिनोदयस्ते ॥

ஹ்ருத் பங்கஜம் மம விகாஸயது ப்ரமுஷ்ணன்
உல்லாஸமுத்பலருசேஸ் தமஸாம் நிரோ
த்தா 1

தோஷானுஷங்க ஜடதாம் ஜகதாம் துனை:
கமாக்ஷி வீக்ஷண விலாஸ திநோதயஸ்தே ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே - உன்னுடைய, வீக்ஷண விலாஸ - பார்வையின் அழகாகிற, தினோதய: - பகற்காலத்தின் ஆரம்பமானது (ஸூர்யோதயமானது), உத்பலருசே: உல்லாசம் - நீலோத்பலங்களின் அழகை (காந்தியை), ப்ரமுஷ்ணன் - அதிகமாக அடைந்துகொண்டு, தமஸாம் நிரோத்தா - இருட்டைப் போக்கடிப்பதாய், ஜகதாம் - லோகங்களுடைய, தோஷானுஷங்க ஜடதாம் - தோஷங்களால் ஏற்படும் ஜாட்யத்தை, துனை:- அகற்றுவதாய், மம ஹ்ருத்பங்கஜம் - எனது ஹ்ருதயமாகிற தாமரையை, விகாஸயது - மலரச்செய்யட்டும்.

(58) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற ஸூர்யோதயமானது, நீலோத்பல புஷ்பங்களின் காந்தியை தோற்கடித்தும், இருட்டை விலக்கியும் லோகத்தினுடைய ஜடத்தன்மை என்கிற குளிரையும் விலக்கி எனது ஹ்ருதயமாகிற தாமரைப்பூவை மலரச் செய்யட்டும்.

1. இதில் அம்பாளுடைய பார்வையை ஸூர்யோதயத்திற்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. ஆயினும் பார்வையைக் கருப்பு நிறமுள்ளதாக வர்ணிப்பது வழக்கமாகையால் அதை அனுஸரித்து 'உத்பலருசே: உல்லாஸம் ப்ரமுஷ்ணன்' என்று சொல்லப்பட்டது. தமஸ் என்றால் இருட்டு என்ற அர்த்தமிருப்பதுடன் பாபம் என்ற அர்த்தமுண்டு. பாபத்தைக் கருப்பு நிறமுள்ளதாக வர்ணிப்பது கவிகளின் ஸம்ப்ரதாயம். அம்பிகையின் கடாக்ஷமானது பாபத்தைப்போக்குவதால் 'தமஸாம் நிரோத்தா' என்று சொல்லப்பட்டது.

2. தினோதய: என்பது (தினத்தை உதயம் செய்வதால்) ஸூர்யனைக் குறிப்பதாகவும் சொல்லலாம்.

59 चक्षुर्विमोहयति चन्द्रविभूषणस्य
कामाक्षि तावककटाक्षतमः प्ररोहः ।
प्रत्यङ्मुखं तु नयनं स्तिमितं मुनीनां
प्राकाश्यमेव नयतीति परं विचित्रम् ॥

சக்ஷுர் விமோஹயதி சந்த்ர விபூஷணஸ்ய
காமாக்ஷி தாவக கடாக்ஷ: தம: ப்ரரோஹ: |
ப்ரத்யங் முகம் து நயனம் ஸ்திமிதம் முனீனாம்
ப்ராகாச்யமேவ நயதீதி பரம்விசித்ரம்॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தாவக கடாக்ஷ - உனது பார்வையென்கிற, தம: ப்ரரோஹ: - இருட்டின் ஆவிர்பாவமானது, சந்த்ர விபூஷணஸ்ய - (சந்திரனை சிரோபூஷணமாக உடைய, பரமசிவனுடைய, சக்ஷுர் விமோஹயதி - கண்களை மயக்குகிறது. து - ஆயினும், முனீனும் - யோகிகளுடைய, ப்ரத்யங் முகம் - உள்நோக்கியதும், ஸ்திமிதம் - அசைவற்றதுமான, நயனம் - கண்ணை (த்ருஷ்டியை), ப்ராகாச்யமேவ நயதி வெளிச்சத்தோடிருக்கச் செய்கிறது இதி - என்பதானது, பரம்விசித்ரம் - மிகுந்த ஆச்சர்யம்.

(59) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற தமஸ் இருட்டு விளைவானது சந்திமௌளியான பரமசிவனின் கண்ணை மோஹிக்கச் செய்கிறது. ஆனல், அது யோகிகளுடைய அசைவற்ற உள்கண்ணை வெளிச்சத்துடன் விளங்கச் செய்கிறதென்பது ஆச்சர்யம்.

கடாக்ஷமானது கருப்புநிறமுடையதால் அதை 'தம: ப்ரரோஹ:' என்று சொல்லப்பட்டது. அந்த இருட்டினல் பரமசிவனுக்கு கண்கள் தெரியாமல் மயங்குகையில் அந்தர் முகமானதும் அசைவற்றதுமான யோகிகளுடைய பார்வையானது ப்ரகாசத்தை யடைகிறது. இந்த ஆச்சர்யத்தை கவியானவர் இதில் வர்ணிக்கிறார். இதனல் பரமசிவன் அம்பிகையின் கடாக்ஷ விசேஷத்தினல் முனீச்வரர்களுடைய ஹ்ருதயமானது ப்ரகாசத்தை (பரிசுத்தத்தை) அடைவதும் சொல்லப்பட்டது.

60 कामाक्षि वीक्षणरुचा युधिनिर्जितं ते ।
नीलोत्पलं निरवशेषगताभिमानम् ।
आगत्य तत्परिसरं श्रवणावतंस-
व्याजेन नूनमभयार्थनमातनोति ॥

காமாக்ஷி வீக்ஷணருசா யுதி நிர்ஜிதம் தே
நீலோத்பலம் நிரவ சேஷ கதாபிமானம் |
ஆகத்ய தத் பரிஸரம் ச்ரவணாவதம்ஸ-
வ்யாஜேன நூனம் அபயார்த்தனம் ஆத
[னோதி॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே விக்ஷணருசா - உனது பார்வையின் காந்தியினால், யுதி நிர்ஜிதம் - யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டதான, நீலோத்பலம் - நீலோத்பலமானது, நிரவசேஷ கதாபிமானம் - மானத்தை முற்றிலுமிழந்ததாய், தத்பரிஸரம் - அந்தப் பார்வையின் ஸமீபத்தை, ச்ரவணாவதம்ஸ வ்யாஜேன - காதிற்கு அலங்காரமென்ற வ்யாஜத்தினால். ஆகத்ய - அடைந்து அபயார்த்தனம் ஆதனோதி - அபயத்தை வேண்டுகிறது, நூனம் இதில் ஸந்தேஹமில்லை.

(60) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷ சோபையால் ஜயிக்கப்பட்ட நீலோத்பல புஷ்பமானது, கர்வத்தை அடியோடு விட்டுவிட்டு, உனது காதில் இருக்கும் வியாஜத்தினால் கடாக்ஷத்தினிடம் வந்து அபயம் வேண்டுகிறது.

உத்தம ஸ்த்ரீகள் காதுகளில் புஷ்பங்களை அணிவது ஓர் அலங்காரமாகும். அவ்வித புஷ்பத்தை ச்ரவணாவதம்ஸம் கர்ணாவதம்ஸம் என்று சொல்லப்படும். இவ்விதம் அம்பிகை தன் காதில் நீலோத்பலத்தை அணிந்திருப்பதை இங்கு வேறு காரணம் சொல்லி வர்ணிக்கப்பட்டது.

61 आश्चर्यमम्ब वदनाम्युदयावलम्बी
कामाक्षि चञ्चलनिरीक्षणविभ्रमस्ते ।
धैर्यं विधूय तनुते हृदि रागबन्धं
शंभोस्तदेव विपरीततया मुनीनाम् ॥

ஆச்சர்யமம்ப வதனுப்புதயாவலம்பீ
காமாக்ஷி சஞ்சல நிரீக்ஷண விப்ரமஸ்தே |
தைர்யம் விதூய தனுதே ஹ்ருதி ராகபந்தம்
சம்போஸ் ததேவ விபரீததயா முனீனாம் ||

அம்ப காமாக்ஷி — தாயே! காமாக்ஷி! வதனுப்யுதயாவலம்பீ - உனது முகத்தின் மேன்மைக்கு ஆதாரமாயிருக்கும், தே-உனது சஞ்சல நிரீக்ஷண விப்ரம:-சஞ்சலமான பார்வையின் அழகானது, சம்போ: - பரமசிவனுடைய, தைர்யம்விதூய - தைர்யத்தைப் போக்கி, ஹ்ருதி - அவருடைய மனதில், ராகபந்தம் கரோதி - ஆசையினுடைய கட்டை உண்டுபண்ணுகிறது. (அப்படியிருக்க) தத் ஏவ-அதே பார்வையானது, விபரீதயா-அதற்கு மாறு பாடாக, முனீனாம்-முனிகளுடைய யோகிகளுடைய, பக்தர்களுடைய), ஹ்ருதி-மனதில், ராகபந்தம் விதூய-ஆசையின் கட்டைப்போக்கி, தைர்யம் தனுதே-தைர்யத்தை உண்டுபண்ணுகிறது. ஆச்சர்யம் (இது) ஆச்சர்யம்.

61) தாயே! காமாக்ஷி! உனது முகசோபைக்குக் காரணமாயிருக்கும் உன் சஞ்சல கடாக்ஷ பார்வையின் விலாஸமானது பரமசிவனின் மனதில் தைர்யத்தைப்போக்கி ராகத்தை (ஆசையை) உண்டு பண்ணுகிறது. ஆனால் அந்த கடாக்ஷமே யோகிகளுக்கு மனதில் ராகத்தைப்போக்கி தைர்யத்தைக் கொடுக்கிறதென்பது ஆச்சர்யம்.

62 जन्तोः सकृत्प्रणमतो जगदीड्यतां च
तेजस्वितां च निशितां च मतिं सभायाम् ।
कामाक्षि माक्षिकझरीमिव वैखरीं च
लक्ष्मीं च पक्ष्मलयति क्षणवीक्षणं ते ।

ஜந்தோ:ஸக்ருத் ப்ரணமதா ஜகதீட்யதாம் ச
தேஜஸ்விதாம் ச நிசிதாம் ச மதிம் ஸபாயாம் |
காமாக்ஷி மாக்ஷிக ஜரீமிவ வைகரீம் ச
லக்ஷ்மீம் ச பக்ஷ்மளயதி க்ஷண வீக்ஷணம்தே ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே க்ஷணவீக்ஷணம் - உனது க்ஷணநேரப் பார்வையானது, ஸக்ருத் ப்ரணமத: - ஒருமுறை நமஸ்காரம் செய்த, ஜந்தோ: - மனுஷ்யனுக்கு, ஜகதிட்பதாம் ச - லோகத்தார்களால் புகழப்படுதலையும், தேஜஸ்விதாம் ச: - தேஜஸ்ஸோடிருத்தலையும், நிசிதாம் மதிம் ச — கூர்மையான புத்தியையும், வைபாம் - ஸபையில், மாக்ஷிக ஜரீமிவ - தேனின் பெருக்குபோன்ற, வைகரீம் ச - வாக்கையும், லக்ஷ்மீம் ச — செல்வத்தையும், பக்ஷ்மளபதி - அதிகரிக்கச்செய்கிறது.

(62) காமாக்ஷியே! உனது ஒருக்ஷணப் பார்வையானது உன்னை நமஸ்கரிக்கும் ஜந்துவுக்கு உலகத்தால் கொண்டாடத்தக்க நிலைமையையும், தேஜஸ்ஸையும் ஸபையில் ஸூக்ஷ்மமான புத்தியையும் தேனுக்கொப்பான வாக்ஜரியையும், ஐச்வர்யத்தையும் அதிகரிக்கச் செய்கிறது.

1. இதில் அம்பிகையை ஒரு தடவை நமஸ்கரித்தாலேயே அவன்மீது அம்பிகையின் பார்வையானது க்ஷணநேரம் பட்டாலும் அவ்வித அனுக்ரஹம் பெற்றவனுக்கு ஏற்படும் விசேஷ தன்மைகளைப்பற்றிச் சொல்லப்பட்டது. இம்மாதிரி ஸகல ஸௌபாக்யங்களும் அம்பிகையின் பக்தர்களுக்கு ஏற்படுவதைப்பற்றிப் பலவிதமாக கவிகளால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. ஜரீ என்றால் நீர்வீழ்ச்சி, ஊற்று, அருவி என்றர்த்தம்.

3. அம்பிகையை ஒரு முறை நமஸ்காரம் செய்தவனுக்கே இப்படி ச்லாக்யமான கவித்வமானது ஏற்படுவதை ஸ்ரீ மதாசார்யாளும்,

'ஸக்ருன்னத்வா ந த்வாம் கதமிவ ஸதாம் ஸன்னித்ததே
மது க்ஷீர த்ராக்ஷா மதுரிம துரீணா: பணிதய: |'

என்பதாக 'ஸௌந்தர்ய லஹரீ'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

63 कादम्बिनी किमयते न जलानुषङ्गं
भृङ्गावली किमुररीकुरुते न पद्मम् ।
किं वा कलिन्दतनया सहते न गङ्गां
कामाक्षि निश्चयपदं न तवाक्षिलक्ष्मीः ॥

காதம்பினீ கிமயதே ந ஜலானுஷங்கம்
ப்ருங்காவளீ கிமுரரீகுருதே ந பத்மம் |
கிம் வா களிந்ததனயா ஸஹதே ந கங்காம்
காமாக்ஷி நிச்சயபதம் ந தவாக்ஷிலக்ஷ்மீ:

காமாக்ஷி - ஹே காமாக்ஷி !, காதம்பினீ - மேகங்களின் கூட்டமானது, ஜலானுஷங்கம் - ஜலத்தின் ஸம்பந்தத்தை, அயதே ந கிம் - அடையவில்லையா ? ப்ருங்காவளீ - வண்டுகளின் கூட்டமானது, பத்மம் - தாமரை புஷ்பத்தை, உரரீகுருதே ந கிம் - ஒப்புக்கொள்கிறதில்லையா (சேர்த்துக்கொள்கிறதில்லையா), வா - அல்லது, களிந்த தனயா - யமுனா நதியானது, கங்காம் - கங்கையை, ஸஹதே ந கிம் - பொறுத்துக்கொள்வதில்லையா (சேருகிறதில்லையா) தவ அக்ஷிலக்ஷ்மீ: - உனது கடாக்ஷ லக்ஷ்மியானது நிச்சய பதம் - நிச்சயமாய் (ஸ்திரமாய், சஞ்சலமில்லாமல்) இருக்கும் தன்மையை, ந- (ஏன் அடைகிறது) இல்லை.

(63) மேகங்கள் ஜல ஸம்பந்தத்தை அடைகின்றன. வண்டுகள் தாமரைப்பூவின் சேர்க்கையை அடையவில்லையா ? யமுனையானது கங்கையின் சேர்க்கையை ஸஹிக்கவில்லையா ? உனது கடாக்ஷ சோபைமட்டும் நிச்சயமற்ற நிலைமையிலிருப்பதேன் ?

64 काकोलपावकतृणीकरणेऽपि दक्षं
कामाक्षि बालकसुधाकरशेखरस्य ।
अत्यन्तशीतलतमोऽप्यनुपारतं ते
चित्तं विमोहयति चित्रमयं कटाक्षः ॥

காகோல பாவக த்ருணீகரணே²பி தக்ஷம்
காமாக்ஷி பாலக ஸுதாகர சேகரஸ்ய |
அத்யந்த சீதளதமோ²ப்யனுபாரதம் தே
சித்தம் விமோஹயதி சித்ரமயம் கடாக்ஷ:||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி, அயம் தே கடாக்ஷ:- இந்த உனது கடாக்ஷமானது, அத்யந்தசீதளம் அபி - தான் மிகுந்த குளிர்ச்சியுடையதாயிருந்தபோதிலும், பாலக ஸுதாகர சேக

ரம்ப - பாலசந்திரனை சிரோபூஷணமாயுடைய பரமசிவனுடைய, சித்தம் - மனதை, (அது) காகோல பாவக - (காலகூட) விஷாக்னியையும், த்ருணீகரணே தக்ஷம் அபி - த்ருணமாத்ரமாகச் செய்வதில் ஸாமர்த்யமுடையதாயிருப்பினும், அனுபாரதம் - இடைவிடாமல் (எப்பொழுதும்,) விமோஹயதி - மோஹமடையச் செய்கிறது, சித்ரம் - (இது) ஆச்சர்யம்.

(64) காமாக்ஷியின் கடாக்ஷமானது மிகவும் குளிர்ச்சியுள்ளதான பாலசந்திரனை சிரஸில் பூஷணமாகக் கொண்ட பரமசிவனுடைய, கால கூட விஷ அக்னியைக்கூட அலக்ஷ்யம் செய்யக்கூடிய மனதைக்கூட மோஹிக்கச் செய்யக்கூடியதாயிருப்பது ஆச்சர்யம்.

1. அத்யுக்ரமான காலகூட விஷத்தின் அக்னி ஜ்வாலைகளுக்கும் அஞ்சாத பரமசிவனுடைய மனதானது, அம்பிகையின் கடாக்ஷம் அத்யந்தம் குளிர்ச்சி பொருந்தியதாயிருந்த போதிலும் அதற்கு வசப்பட்டு மயங்குகிறதே, இந்த ஆச்சர்யத்தை என்னென்று சொல்வது என்று கவியானவர் வர்ணிக்கிறார்.

2. பரமசிவனுடைய சிரோபூஷணமாயிருக்கும் சந்த்ரனைவன் எப்போதும் பாலசந்தரனுயிருப்பதாக வர்ணிப்பது கவிகளின் ஸம்ப்ரதாயம்.

65 कार्पण्यपूररसवर्धितमम्ब मोह
कन्दोद्गतं भवमयं विषपादपं मे ।
तुङ्गं छिनत्तु तुहिनाद्रिसुते भवत्याः
काञ्चीपुरेश्वरि कटाक्षकुठारधारा ॥

கார்பண்ய பூர ரஸ வர்த்தித மம்ப மோஹ
கந்தோத்கதம் பவமயம் விஷபாதபம் மே |
துங்கம் சினத்து துஹினாத்ரிஸுதே பவத்யா:
காஞ்சீபுரேச்வரீ கடாக்ஷ குடார தாரா ‖

அம்ப - தாயே!, துஹினாத்ரி ஸுதே — ஹிமவானுடைய பெண்ணே!, காஞ்சீபுரேச்வரீ - காஞ்சீ நகரத்திற்கு ஈச்வரியா

பிருப்பவளே!, பலத்யா:-உன்னுடைய, கடாக்ஷ குடாரதாரா - கடாக்ஷமாகிற கோடாலியின் கூர்ப்பான முனையானது, மே - என்னுடையதான, கார்பண்யபூர ரஸ வர்த்திதம் — தாரித்ரிய மாகிற வெள்ள ஜலத்தினால் வளரச்செய்யப்பட்டதும் மோஹ கந்தோத்கதம்—மோஹமென்கிற வித்திலிருந்து உண்டானதும், பலமயம் — ஸம்ஸாரமென்பதையே ஸ்வரூபமாயுடையதும், துங்கம் — மிகுந்த உயரத்தையுடையதுமான, விஷ பாதபம்— விஷவ்ருக்ஷத்தை, சினத்து — வெட்டி எறியட்டும்.

(65) காஞ்சிபுரேச்வரியும் ஹிமயமலையின் புத்ரியுமான காமாக்ஷியே! உனது கடாக்ஷமாகிற கோடரியானது தரித்ரதன் மையாகிற ஜலத்தால் வளர்ந்ததாயும், மோஹமாகிற மூலயி லிருந்து கிளம்பியதுமான ஸம்ஸாரரூபமான விஷவிருக்ஷத்தை வெட்டட்டும்.

66 कामाक्षि घोरभवरोगचिकित्सनार्थं
मभ्यर्थ्य देशिककटाक्षभिषक्प्रसादात् ।
तत्रापि देवि लभते सुकृती कदाचि-
दत्यन्तदुर्लभमपाङ्गमहौषधं ते ॥

காமாக்ஷி கோர பவரோக சிகித்ஸனார்த்தம்
அப்யர்த்ய தேசிக கடாக்ஷ பிஷக் ப்ரஸாதாத்|
தத்ராபி தேவி லபதே ஸுக்ருதீ கதாசித்
அத்யந்த துர்லபம் அபாங்க
மஹௌஷதம் தே"

காமாக்ஷி தேவி - ஹே காமாக்ஷி! தேவி!, கோர பவரோக - கோரமான ஸம்ஸாரமென்ற வியாதியை, சிகித்ஸனார்த்தம் - போக்கிக்கொள்வதற்காக, ஸுக்ருதீ - புண்யசாலியானவன், அப்யர்த்ய - விசேஷமாகப் ப்ரார்த்தனை செய்து, தேசிக கடாக்ஷ - குருநாதருடைய கடாக்ஷமாகிற பிஷக் ப்ரஸாதாத் - வைத்ய னுடைய அநுக்ரஹத்தால், தத்ராபி கதாசித் அதிலும் எப் போதாவது ஒரு சமயம், அத்யந்த துர்லபம் - கிடைப்பதற்கு மிகவும் அரிதான, தே அபாங்க மஹௌஷதம் - உனது கடாக்ஷ மாகிற உயர்ந்த ஔஷதத்தை, லபதே - அடைகிறான்.

(66) தேவி! காமாக்ஷி! புண்யசாலியாயிருப்பவன், ஸம்ஸாரமாகிற ரோகத்தைப் போக்கிக்கொள்ள, ஆசார்ய கடாக்ஷமாகிற வைத்யனின் கிருபையால் உனது கடாக்ஷமாகிற மஹா ஔஷதத்தைப் பெறுகிறான்.

1. இதில் ஸம்ஸாரத்தை கோரமான ரோகமாகவும், அம்பிகையின் கடாக்ஷத்தை அந்த ரோகத்தைப் போக்கவல்ல மஹௌஷதமாகவும், குருநாதருடைய அநுக்ரஹத்தை அவ்விதமான ஔஷதத்தைக் கொடுக்கும் வைத்தியனாகவும் வர்ணிக்கப்பட்டது. ரோகங்களில் ஸம்ஸார (பவ) மென்ற ரோகமே மிகக் கொடியதென்று சொல்வது வழக்கம்.

2. அம்பிகையின் கடாக்ஷமானது ஸுக்ருதமாயிருக்கும் புண்ய கார்யங்களைச் செய்வதனாயிருக்கும்) குருவின் அநுக்ரஹம் கிடைக்கப்பெற்றும், வெகுகாலம் அப்யர்த்தனம் செய்தும் எப்போதாவது ஒரு ஸமயம் கிடைக்கக்கூடியதாயிருப்பதால், அதை 'அத்யந்த துர்லபம்' என்று இங்கு சொல்லப்பட்டது.

67 कामाक्षि देशिककृपाङ्कुरमाश्रयन्तो
नानातपोनियमनाशितपाशबन्धाः ।
वासालयं तव कटाक्षममुं महान्तो
लब्ध्वा सुखं समधियो विचरन्ति लोके ॥

காமாக்ஷி தேசிக க்ருபாங்குரம் ஆச்ரயந்தோ
நாநா தபோ நியம நாசித பாசபந்தா: |
வாஸாலயம் தவ கடாக்ஷமமும் மஹாந்தோ
லப்த்வா ஸுகம் ஸமதியோ விசரந்தி லோகே ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, தேசிக க்ருபாங்குரம்-ஆச்சார்யனுடைய க்ருபையை, ஆச்ரயந்த:- ஆச்ரயித்தவர்களும் (அடைந்தவர்களும்), நாநா தபோநியம - நானாவிதமான தபஸ்ஸுகளாலும் நியமங்களாலும், நாசித பாச பந்தா:- பாசங்களின் பந்தங்களைப் போக்கிக்கொண்டவர்களுமான, மஹாந்த:- மஹான்கள், அமும் தவ கடாக்ஷம் - இந்த உனது கடாக்ஷமாகிற; வாஸாலயம் - வீட்டை, லப்த்வா - அடைந்து, ஸமதிய:- ஸமபுத்தி

யுள்ளவர்களாய், லோகே ஸுகம் விசரந்தி - லோகத்தில் ஸுகமாக ஸஞ்சரிக்கிறார்கள்.

(67) காமாக்ஷி! மஹான்கள், ஆசார்ய க்ருபையைப் பெற்றும், நாநாவித தபஸ்களால் நசித்த ஸம்ஸார பாசத்தை உடையவர்களாக, உனது கடாக்ஷமாகிற க்ருஹத்தை அடைந்து ஸமப்ருத்தியுடன் லோகத்தில் ஸஞ்சரிக்கிறார்கள்.

68 साकूतसंलपितगर्भितमुग्धहासं
व्रीडानुरागसहचारिविलोकनं ते ।
कामाक्षि कामपरिपन्थिनि मारवीर-
साम्राज्यविभ्रमदशां सफलीकरोति ॥

ஸாகூத ஸம்லபித கர்பித முக்த ஹாஸம்
வ்ரீடானுராக ஸஹசாரி விலோகனம் தே |
காமாக்ஷி காம பரிபந்தினி மாரவீர
ஸாம்ராஜ்ய விப்ரம தசாம் ஸபலீகரோதி ‖

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, ஸாகூத ஸம்லபித கர்பித-ச்ருங்கார கேளியான பேச்சின் பாவம் நிறைந்ததான, முக்தஹாஸம்- மந்தஹாஸத்தோடு கூடியதும், வ்ரீடானுராக ஸஹசாரி - நாணம் ப்ரியம் இவையுடையதுமான, தே விலோகனம் - உனது பார்வையானது காம பரிபந்தினி - பரமசிவனுடைய விஷயத்தில், மார வீர - மன்மதனுகிற வீரனுடைய, ஸாம்ராஜ்ய விப்ரமதசாம் - ஸாம்ராஜ்யத்தின் ஆடம்பரத்தை, ஸபலீ கரோதி - ஸபலமாகச் செய்கிறது. (நிறைவேற்றுகிறது,

(68) காமாக்ஷியே! சிருங்காரப் பேச்சின் போக்கு நிறைந்த மந்தஹாஸத்துடன் கூடியதும், வெட்கம், ஆசை இவைகளுடன் சேர்ந்ததுமான உனது கடாக்ஷமானது காமசத்ருவான பரமசிவனிடமும் மன்மத விலாஸங்களை ஸபலமாகச் செய்கிறது.

அதாவது, அவ்வித குணங்களோடு பொருந்திய கடாக்ஷத்தின் விசேஷத்தினுல் மன்மதனுனவன் பரமசிவனிடத்தில் கூட தன் ஸாம்ராஜ்யத்தை செலுத்த வல்லவனுக ஆகிறுன் என்று சொல்லப்பட்டது.

69 कामाक्षि विभ्रमबलैकनिधिर्विधाय
भ्रूवल्लिचापकुटिलीकृतिमेव चित्रम् ।
स्वाधीनतां तव निनाय शशाङ्कमौले-
रङ्गार्धराज्यसुखलाभमपाङ्गवीरः ॥

காமாக்ஷீ விப்ரம பலைக நிதிர்விதாய
ப்ரூவல்லி சாப குடிலீக்ருதிமேவ சித்ரம் |
ஸ்வாதீனதாம் தவ நிநாய சசாங்கமௌளேஃ
அங்கார்த்த ராஜ்யஸுகலாபம் அபாங்கவீர:||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி, அபாங்க வீர :-உனது கடாக்ஷமாகிற வீரனானவன், விப்ரம பலைக நிதி:- உனது விலாஸமாகிற ஒரே ஒத்தாசையை உடையவனாய், ப்ரூவல்லி சாபகுடிலீக்ருதி மேவ - புருவக்கொடியாகிய வில்லை வளைக்கிற கார்யத்தை மட்டுமே, விதாய - செய்து, சசாங்க மௌளே:- பரமசிவனுடைய, அங்கார்த்த ராஜ்ய ஸுக லாபம் - பாதி சரீரமாகிற ராஜ்ய ஸுகத்தின் ப்ரயோஜனத்தை, தவ ஸ்வாதீனதாம் நிநாய - உனக்கு ஸ்வாதீனமாகச் செய்து விட்டான். சித்ரம் - இது ஆச்சர்யம்.

(69) காமாக்ஷியே! உனது கடாக்ஷமாகிற யுத்தவீரன், உனது விலாஸத்தையே பலமாகக் கொண்டும், புருவக்கொடியாகிற வில்லை வளைக்கும் கார்யமொன்றையே செய்து பரமசிவனுடைய பாதிசரீரமாகிற அர்த்த ராஜ்யஸுக லாபத்தை உனக்கு ஸ்வாதீனமாகச் செய்தான்.

70 कामाङ्कुरैकनिलयस्तव दृष्टिपातः
कामाक्षि भक्तमनसां प्रददाति कामान् ।
रागान्वितः स्वयमपि प्रकटीकरोति
वैराग्यमेव कथमेष महामुनीनाम् ॥

காமாங்குரைக நிலயஸ்தவ த்ருஷ்டிபாத:
காமாக்ஷி பக்தமனஸாம் ப்ரததாதி காமான் |
ராகான்வித: ஸ்வயமபி ப்ரகடீகரோதி
வைராக்யமேவ கதமேஷ மஹாமுனீனாம்||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! காமாங்குரைக நிலய:- காமத்தை முக்யமான இருப்பிடமாக உடைய (காமம் நிறைந்ததான) தவ த்ருஷ்டிபாத: -உனது பார்வையானது, பக்த மனஸாம் - பக்தர்களுடைய மனங்களுக்கு, காமான் ப்ரதாதி - காமங்களை (அவர்களுடைய விருப்பங்களை) யதேஷ்டமாகக் கொடுக்கிறது. (அபிநும்) ஏஷ: - இந்த உனது கடாக்ஷமானது, ஸ்வயம் - தான், ராகான்வித: அபி - ராகத்தோடு (ஆசையோடு) கூடியிருந்த போதிலும், மஹாமுனீனும் - முனீச்வரர்களுக்கு, வைராக்யமேவ - வைராக்யத்தையே (ராகமில்லாதிருத்தலையே) கதம் ப்ரகடீகரோதி - எப்படி உண்டுபண்ணுகிறது.

(70) ஹே ! காமாக்ஷி ! காமத்திற்கு முக்ய இருப்பிடமான உனது கடாக்ஷமானது, பக்தர்களுக்கு காமங்களைக் கொடுக்கிறது. ஆனால் கடாக்ஷமானது ராகத்துடன் கூடியிருந்தபோதிலும் முனிகளுக்கு ராகமின்மையையே கொடுக்கிறதென்பது எப்படி ?

1. பக்தர்களுடைய விருப்பங்களை யெல்லாம் அபரிமிதமாக கொடுப்பதால் அம்பாளுக்குக் காமாக்ஷியென்ற பெயர் ஏற்பட்டது என்பதைப்பற்றி, முற்கனவேயே சொல்லப்பட்டது.

2. ராகமென்றால் ஆசை பற்றுதல் என்று அர்த்தம். வைராக்யமென்றால் பற்றுதல் அற்றதான நிலைமை. அம்பிகையின் கடாக்ஷமானது தான் (பரமசிவனிடத்தில்) ராகத்தோடு (ஆசையோடு) இருந்தபோதிலும், முனீச்வரர்களுடைய மனதில் ராகமில்லாதிருத்தலை விஷயாதிகள் பற்றுதல் இல்லாதிருத்தலை) எப்படி உண்டுபண்ணுகிறது என்பதாக கவியானவர் ஆச்சர்யப்படுகிறார்.

71 कालाम्बुवाहनिवहैः कलहायते ते
कामाक्षि कालिममदेन सदा कटाक्षः ।
चित्रं तथापि नितराममुमेव दृष्ट्वा
सोत्कण्ठ एव रमते किल नीलकण्ठः ॥

காலாம்புவாஹ நிவஹை: கலஹாயதே தே
காமாக்ஷி காளிம மதேன ஸதா கடாக்ஷ: |
சித்ரம் ததாபி நிதராம் அமுமேவ த்ருஷ்ட்வா
ஸோத்கண்ட ஏவ ரமதே கில நீலகண்ட: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே - கடாக்ஷ: - உனது கடாக்ஷமானது, காலிம மதேன - தான் கருப்பாயிருக்கும் மதத்தினால் (கொழுப்பினால்), காலாம்புவாஹ நிவஹை: - கார மேகங்களின் கூட்டங்களோடு, ஸதா கலஹாயதே - எப்போதும் கலஹம் செய்கிறது (சண்டை போடுகிறது). ததாபி - அப்படி இருந்தும், அமுமேவ - அதையே, நிதராம் த்ருஷ்ட்வா - அதிக மாக (எப்போதும்) பார்த்து, நீலகண்ட:- நீலகண்டனான பரம சிவன், ஸோத்கண்ட ஏவ - ஆசையோடு கூடவே, ரமதே கில- கூத்தாடுகிறார் (ஸந்தோஷப்படுகிறார்) அல்லவா. சித்ரம் - இது விசித்ரமாக இருக்கிறது.

(71) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷமானது கருப் பாயிருக்கும் தன்மையால் காளமேகங்களுடன் சண்டையிடுகிறது. ஆயினும் கருப்புநிறமுள்ள கண்டத்துடன் நீலகண்டன் மட்டும் இதைக்கண்டு எப்போதும் ரஸிக்கிறான்.

1. மயிலின் கழுத்து நீலமாயிருப்பதால் அதற்கு நீலகண்ட மென்று பெயர். பரமசிவன் ஹாலாஹல விஷத்தைத் தன் கழுத்தில் தரித்ததால் அது சுத்த ஸ்படிக ஸங்காசமான சரீரத் தையுடைய அவருடைய கழுத்தில் நீல நிறமுள்ளதாகத் தோன்று கிறது. ஆகவே அவருக்கும் நீலகண்டரென்று பெயர். இவ் விதமான பெயரின் ஒற்றுமையைக்கொண்டு அம்பிகையின் கடாக்ஷமானது இதில் வர்ணிக்கப்பட்டது.

2. காளமேகங்களை (கீருண்ட மேகங்களை) பார்த்து மயில் கள் ஸந்தோஷப்பட்டு நர்த்தனம் செய்வதாக வர்ணிப்பது கவி களின் ஸம்ப்ரதாயம்.

3. அம்பாளுடைய கடாக்ஷமானது கறுப்பு நிறத்தில் நீருண்ட மேகங்களையும் தோற்கடிப்பதாக இருப்பதை அவை களோடு கலஹம் செய்வதாக இங்கு சொல்லப்பட்டது. அப் படியிருந்தும் அந்த கடாக்ஷத்தைப் பார்த்து (காளமேகங்களைக் கண்டு மயில்கள் நர்த்தனம் செய்வதுபோல்) நீலகண்டனான பரமசிவன் ஸந்தோஷமடைகிறாரே, இது என்ன ஆச்சரியம் என்று கவி வர்ணிக்கிறார்.

72 कामाक्षि मन्मथरिपुं प्रति मारताप-
मोहान्धकारजलदागमनेन नृत्यन् ।
दुष्कर्मकन्चुकिकुलं कबलीकरोतु
व्यामिश्रमेचकरुचिस्त्वदपाङ्गकेकी ॥

காமாக்ஷி மன்மத ரிபும் ப்ரதிமாரதாப-
மோஹாந்தகார ஜலதாகமனேன ந்ருத்யன் |
துஷ்கர்ம கஞ்சுகிகுலம் கபளீகரோது
வ்யாமிச்ர மேசக ருசிஸ்த்வதபாங்ககேகீ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! வ்யாமிச்ர மேசக ருசி:- கலந்த தான மேகத்தின் காந்தியைப் போன்ற காந்தியுடையதான, த்வத் அபாங்ககேகீ - உனது கடைக்கண்ணாகிய மயிலானது, மாரதாப - மன்மத தாபத்தினால் உண்டான, மோஹாந்தகார, மோஹமென்ற இருட்டோடு கூடிய, ஜலதாகமனேன - வர்ஷா காலத்தின் வருகையினால், மன்மதரிபும் ப்ரதி - பரமசிவனுக்கு எதிரில், ந்ருத்யன் - நர்த்தனம் செய்துகொண்டு, துஷ்கர்ம கஞ்சுகி குலம் - (எனது) பாபகர்மாக்களாகிய ஸர்ப்பங்களின் கூட்டத்தை, கபளீகரோது - நாசம் செய்யட்டும்.

(72) காமாக்ஷியே! உனது கடாக்ஷமாகிற குயிலானது மேககாந்தியை போன்றது. அது பரமசிவனின் எதிரில் நர்த்தனம்செய்து எனது பாபமாகிற பாம்புக்கூட்டத்தை கபளீகாரம் செய்யட்டும்.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை மயிலுக்கு ஒப்பிடப்பட்டது. வர்ஷாகாலத்தில் நீருண்ட மேகங்களைப் பார்த்து மயில்கள் ஸந்தோஷத்துடன் நர்த்தனம் செய்வது வழக்கம். அது தவிர, மயில்கள் ஸர்ப்பங்களுக்கு வைரிகள். இந்த இரண்டு அம்சங்களும் அம்பிகையின் கடாக்ஷத்திற்கு இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. மேசகமென்றால் கருப்பு நிறத்தைத் தவிர மயில்களின் தோகையிலுள்ள கண்களுக்கும் பெயர்.

73 कामाक्षि मन्मथरिपोरवलोकनेषु
कान्तं पयोजमिव तावकमक्षिपातम् ।
प्रेमागमो दिवसवद्विकचीकरोति
लज्जाभरो रजनिवन्मुकुलीकरोति ॥

காமாக்ஷி மன்மத ரிபோரவலோகனேஷு
காந்தம் பயோஜமிவ தாவகம் அக்ஷிபாதம்
ப்ரேமாகமோ திவஸவத் விகசீகரோதி
லஜ்ஜாபரோ ரஜனிவத் முகுளீகரோதி |

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! மன்மதரிபோ:- பரமசிவனுடைய, அவலோகனேஷு - பார்வைகளின் போது (அதாவது - பரமசிவன் பார்க்கும் காலங்களில்), காந்தம் பயோஜமிவ - அழகான தாமரை புஷ்பம் போன்ற, தாவகம் அக்ஷிபாதம் - உனது பார்வையை, ப்ரேமாகம: - ப்ரியமானது, திவஸவத் விகசீகரோதி - பகற்காலம்போல் மலரச்செய்கிறது. லஜ்ஜாபர: - அதிகமான லஜ்ஜையானது, ரஜனிவத் - ராத்திரிகாலம் போல், முகுளீகரோதி - மூடச்செய்கிறது.

(73) காமாக்ஷியே! பரமசிவன் உன்னைப் பார்க்கும்போது, உனது ப்ரேமையானது உன் கடாக்ஷத்தை தாமரைப்பூவைப் பகல்போல் மலரச்செய்கிறது. லஜ்ஜையோ வென்றால் இரவைப் போல் கடாக்ஷத்தை மூடச்செய்கிறது.

இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை தாமரை புஷ்பத்திற்கு ஸமமாக வர்ணிக்கப்பட்டது. தாமரை புஷ்பங்கள் பகற் காலங்களில் மலர்வதும், ராத்திரி காலங்களில் மூடுவதும் வழக்கம். அம்பிகையின் கடாக்ஷமானது பரமசிவனிடத்திலிருக்கும் ப்ரேமையின் காரணமாய் மலர்வதாலும் பதிவ்ரதைகளுக்கு ஸ்வபாவமாயிருக்கும் லஜ்ஜையினால் மூடுவதாகவும் வர்ணிக்கப்பட்டது. ஆகவே ப்ரேமையை பகலுக்கும், லஜ்ஜையை இரவுக்கும் ஒப்பிடப்பட்டது.

74 मूको विरिञ्चति परं पुरुषः कुरूपः ।
कंदर्पति त्रिदशराजति किंपचानः

कामाक्षि केवलमुपक्रमकाल एव
लीलातरङ्गितकटाक्षरुचः क्षणं ते ॥

மூகோ விரிஞ்சதி பரம் புருஷ: குரூப:
கந்தர்பதி த்ரிதசராஜதி கிம்பசாந: |
காமாக்ஷி கேவலம் உபக்ரம கால ஏவ
லீலா தரங்கித கடாக்ஷருச: க்ஷணம் தே"

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! லீலாதரங்கித - காமகேளிகளுடைய பாவம் நிறைந்தன, தே கடாக்ஷருச: - உனது கடாக்ஷத்தின் காந்திகள், கேவலம் உபக்ரம கால ஏவ - கேவலம் ஆரம்பிக்கும்போதே (பக்தன்மீது படுவதற்கு ஆரம்பிக்கும்போதே), க்ஷணம் - ஒரு க்ஷணகாலத்திற்குள், மூகா விரிஞ்சதி - ஊமையாயிருக்கிறவன் ப்ரம்ஹாவைப்போல் ஆகிறான். பரம் குரூப: - மிகவும் குரூபமாய் இருக்கிறவன், (வெறுக்கப்படும் ரூபத்தையுடையவன்), கந்தர்பதி - மன்மதன் போலாகிறான். கிம் பசான:- மிகவும் தரித்திரனாயிருப்பவன், த்ரிதச ராஜதி - தேவேந்திரனாக ஆகிவிடுகிறான்.

(74) காமாக்ஷி ! லீலையுடன் கூடிய உனது கடாக்ஷ காந்தியானது மனிதன்மீது விழுந்த க்ஷணத்திலேயே அவன் ஊமையனாயிருந்தால் பிர்ம்மாவாகிறான். குரூபியாயிருந்தால் மன்மதனாகிறான். ஏழையாயிருந்தால் இந்திரனாகிறான்.

75 नीलालका मधुकरन्ति मनोज्ञनासा-
मुक्तारुचः प्रकटकन्दबिसाङ्कुरन्ति ।
कारुण्यमम्ब मकरन्दति कामकोटि
मन्ये ततः कमलमेव विलोकनं ते ॥

நீலாளகா மதுகரந்தி மனோக்ஞ நாஸா -
முக்தாருச: ப்ரகடருட பிஸாங்குரந்தி |
காருண்யமம்ப மகரந்ததி காமகோடி
மன்யே தத: கமலமேவ விலோகனந்தே'

அம்ப காமகோடி - தாயே காமகோடி! நீலாளகா: - உனது
ருத்த கூந்தல்கள், மதுகராந்தி - வண்டுகளாக இருக்கின்றன.
ஞெக்கு நாஸா - அழகான (உனது) மூக்கில் அணியப்பட்டிருக்
ம், மௌக்திகருச: - (மூக்குத்தி) முகத்தின் காந்திகள், ப்ரகடரூட
ாங்குராந்தி - வெளிப்படையாக வளர்ந்திருக்கும் தாமரைத்
ண்டின் முளைகள் போலிருக்கின்றன. காருண்யம் - உனது
ருணையானது, மகரந்ததி - பூந் தேன்போல் பெருகுகிறது. தத:-
திலிருந்து, தே விலோகனம் - உனது பார்வையானது, கமல
மவ - தாமரஸ புஷ்பமென்றே, மன்யே - நான் நினைக்கிறேன்.

(75) காமகோடியே! உன்னுடைய கடாக்ஷமானது தாம
ரப் பூவாகவே தோன்றுகிறது. அந்தப் பூவுக்கு உனது கரும்
மயிர்கள் வண்டுகள் போலவும், மூக்கிலுள்ள முத்துக்கள்
ாமரை நணிபோலவும், உனது காருண்யம் தேன் போலவும்
ருக்கிறது.

இதில் அம்பிகையின் பார்வையைத் தாமரஸ புஷ்பமாகவும்,
ந்தல்களை அந்த புஷ்பத்தில் மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டு
ளாகவும், மூக்குத்தி முத்தின் காந்திகளை அந்த புஷ்பத்தின்
ண்டிலுள்ள முளைகளாகவும், அம்பிகையின் காருண்யத்தை அந்த
ஷ்பத்திலிருந்து பெருகும் தேனாகவும் வர்ணிக்கப்பட்டது. அம்
கையின் அபார கருணையானது அவளுடையகடாக்ஷத்திலிருந்தே
வெளிப்படுவதால் அம்பிகையின் லோசன பத்மத்திலிருந்து பெரு
ம் தேனாக இங்கு சொல்லப்பட்டது.

76 आकाङ्क्ष्यमाणफलदानविचक्षणायाः
कामाक्षि तावककटाक्षककामधेनोः ।
संपर्क एव कथमम्ब विमुक्तपाश-
बन्धाः स्फुटं तनुभृतः पशुतां त्यजन्ति ॥

ஆகாங்க்ஷ்யமாண பலதான விசக்ஷணாயா:
காமாக்ஷி தாவக கடாக்ஷக காமதேனோ: |
ஸம்பர்க்க ஏவ கதமம்ப விமுக்தபாச
பந்தா:ஸ்புடம் தனுப்ருத: பசுதாம் த்யஜந்தி ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தாயே! ஆகாங்க்ஷ்யமாண-விரும்பப்பட்ட, பலதான விசக்ஷணயா: - பலன்களைக் கொடுப்பதில் ஸாமர்த்தியமுள்ள, தாவக - உனது, கடாக்ஷ காமதேனோ: - கடாக்ஷமாகிற காமதேனுவினுடைய, ஸம்பர்க்க ஏவ - ஸம்பந்த மேற்பட்டவுடனேயே, தனுப்ருத: -(சரீரிகள்)மனிதர்கள், விமுக்த பாசபந்தா: - பாசங்களின் கட்டுகளிலிருந்து விசேஷமாக விடுவிக்கப்பட்டவர்களாய், பசுதாம் - பசு ஸ்வபாவத்தை(பசுவாயிருக்கும் தன்மையை), ஸ்புடம் - தெளிவாக முழுமையும் கதம் த்யஜந்தி - எப்படி விட்டுவிடுகிறார்கள்.

(76) அம்பா காமாக்ஷி! இஷ்டமான பலன்களைக் கொடுக்கக்கூடியதான உனது கடாக்ஷமாகிற காமதேனுவின் ஸம்பந்தத்தாலேயே, சரீரிகள் பசுத்தன்மையை விட்டு, பாசத்திலிருந்து விடுபடுகிறார்களென்பது அதிசயம்!

1. பக்தர்கள் வேண்டும் வரங்கள் எல்லாவற்றையும் கொடுப்பதில் அம்பிகையின் கடாக்ஷமானது காமதேனுவுக்கு ஒப்பிடப்பட்டது. அப்படிச்சொன்னால் அதே கடாக்ஷமானது, காமதேனுவானது, அவர்கள் மீது பட்டவுடன் அவர்கள் ஸகல பாசங்களையும் துலைத்தெறிந்து பசுஸ்வபாவத்தையே நீக்கப்பெறுகிறார்களே, இது எப்படி பசுவானது பாசத்தால் (கயிற்றால்) கட்டப்படும், அதே மாதிரி ஜனன மரணாதி, ராகத்வேஷாதி பாசங்களால் ஜீவன் கட்டுப்பட்டிருப்பதால் அவனையும் பசுவாகச் சொல்வது வழக்கம்.

2. ஆயினும் (அம்பிகையின் கடாக்ஷமாகிற) ஒரு பசுவினால் (ஜீவன்களாகிற) இதர பசுக்கள் தங்கள் பாசங்களிலிருந்து விடுவிக்கப்பட்டு தங்களுடைய பசுபாவத்தையே போக்கடிக்கப் பெறும் ஆச்சர்யத்தை கவியானவர் இங்கு வர்ணிக்கிறார். அதாவது, அம்பிகையின் கடாக்ஷம் கிடைக்கப்பெற்ற மாத்திரத்திலேயே பக்தர்கள் தங்களுடைய பாசங்களிலிருந்து விடுவிக்கப்பட்டு ஜீவன் முக்தியை அடைந்துவிடுகிறார்கள் என்பது தாத்பர்யம்.

77 संसारघर्मपरितापजुषां नराणां
कामाक्षि शीतलतराणि तवेक्षितानि ।

चन्द्रातपन्ति घनचन्दनकर्दमन्ति
मुक्तागुणन्ति हिमवारिनिषेचनन्ति ॥

ஸம்ஸாரகர்ம பரிதாபஜுஷாம் நராணும்
காமாக்ஷி சீதளதராணி தவேக்ஷிதானி |
சந்த்ராதபந்தி கனசந்தன கர்தமந்தி
முக்தாகுணந்தி ஹிமவாரி நிஷேசனந்தி ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! ஸம்ஸாரகர்ம - ஸம்ஸாரமாகிற கோடை காலத்திய, பரிதாபஜுஷாம் - அத்யந்தமான தாபத்தை அனுபவிக்கும், நராணும் - மனிதர்களுக்கு, சீதளதராணி - மிகவும் குளிர்ந்ததான, தவ ஈக்ஷிதானி - உனது பார்வைகள், சந்த்ராதபந்தி - நிலவாக விளங்குகின்றன. கன சந்தன கர்தமந்தி - கெட்டியான சந்தனக்குழம்பாக இருக்கின்றன. முக்தா குணந்தி - முத்துமாலையாக இருக்கின்றன. ஹிமவாரி நிஷேசனந்தி - பனிஜலத்தைத் தெளித்தது போலுமிருக்கின்றன.

(77) காமாக்ஷியே! ஸம்ஸார தாபத்தை அடைந்துள்ள ஜனங்களுக்கு, மிகவும் சீதளமான உனது கடாக்ஷப் பார்வைகள் சந்திர கிரணங்கள் போலவும், சந்தனக்குழம்பு போலவும், முத்துமாலை போலவும், பனிநீர் தாரைபோலவும் குளிர்ச்சிகரமாக இருக்கின்றன.

ஸம்ஸாரத்தை அத்யுஷ்ணமான கோடைகாலமாகவும், அதினுடைய தாபத்தால் கஷ்டப்படும் ஸகல ஜனங்களுக்கும் கருணையினால் அத்யந்தம் குளிர்ந்த அம்பிகையின் கடாக்ஷமானது அந்த தாபத்தைப் போக்குவதால், (ஸாதாரணமாய் ஸூர்யனுடைய தாபத்தைப் போக்கும்) நிலவாகவும், சந்தனக் குழம்பாகவும், முத்துமாலையாகவும், பனிக்கட்டியின் ஜலமாகவும், இருப்பதாக இதில் வர்ணிக்கப்பட்டது.

78 प्रेमाम्बुराशिसततस्नपितानि चित्रं
कामाक्षि तावककटाक्षनिरीक्षणानि ।
संधुक्षयन्ति मुहुरिन्धनराशिरीत्या
मारद्रुहो मनसि मन्मथचित्रभानुम् ॥

ப்ரேமாம்புராசி ஸததஸ்னபிதானி சித்ரம்
காமாக்ஷி தாவக கடாக்ஷ நிரீக்ஷிதானி |
ஸந்துக்ஷயந்தி முஹுரிந்தன ராசிரீத்யா
மாரத்ருஹோ மனஸி மன்மத சித்ரபானும் ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! ப்ரேமாம்புராசி - அன்பாகிற ஜலக்கூட்டத்தால் (ப்ரவாஹத்தால்), ஸததஸ்னபிதானி - எப்போதும் நனைக்கப்பட்டிருக்கும், தாவக-உனது, கடாக்ஷநிரீக்ஷிதானி - கடைக்கண் பார்வைகள், மாரத்ருஹ: மனஸி - (மன்மதனுக்கு சத்ருவான) பரமசிவனுடைய மனதில், மன்மதசித்ரபானு - காமாக்னியை. இந்தன ராசிரீத்யா - விறகின் குவியலைப்போல், முஹு: - அடிக்கடி, ஸந்துக்ஷயந்தி - உத்திபனம் செய்கின்றன. சித்ரம் - ஆச்சர்யம்.

(78) காமாக்ஷியே ! உனது கடாக்ஷப் பார்வையானது அன்பாகிற ஜலத்தால் நனைக்கப்பட்டவையாயிருந்தும் மன்மத சத்ருவான பரமசிவன் மனதில் காமாக்னியை விருத்தி செய்வதில் விறகுபோல் இருந்து அதை விருத்தி செய்கின்றன.

இதில் அம்பிகையின் கடாக்ஷத்தை விறகிற்கு ஸமமாக வர்ணிக்கப்பட்டது. இந்த விறகானது பரமசிவனுடைய மனதிலுள்ள காமாக்னியை ஓங்கிவளர்ந்து எரியச்செய்கிறது. ஆனால் விறகோ அன்பாகிற ஜலத்தினால் எக்காலமும் நனையப்பெற்றது. அப்படி நனைந்ததாயிருந்தாலும் அக்னியை அதிகரித்து எரியச் செய்வது ஒரு ஆச்சர்யம். திரும்பவும், பரமசிவனோ மன்மதனை (எரித்து) ஜயித்தவர். அப்படியிருந்தும் அவருடைய மனதில் (மன்மதனால் உண்டாகும்) காமாக்னியை (அடிக்கடி) ஸதாகாலமும் (விறகு நெருப்பை அதிகமாக எரியச்செய்வதுபோல்) அதிகரிக்கச் செய்வது இன்னொரு ஆச்சர்யம்.

79 कालाञ्जनप्रतिभटं कमनीयकान्त्या
कंदर्पतन्त्रकलया कलितानुभावम् ।
काञ्चीविहाररसिके कलुषार्तिचोरं
कल्लोलयस्व मयि ते करुणाकटाक्षम् ॥

காலாஞ்ஜன ப்ரதிபட கமனீயகாந்த்யா
கந்தர்ப்ப தந்த்ரகலயா கலிதாநுபாவம் |
காஞ்சீ விஹார ரஸிகே கலுஷார்த்தி சோரம்
கல்லோலயஸ்வ மயி தே கருணாகடாக்ஷம் ||

காஞ்சிவிஹார ரஸிகே - காஞ்சிபுரியில் விளையாடிக்கொண்டிருப்பதில் ப்ரியமுள்ளவளே ! கமநீய காந்த்யா - அழகுள்ள காந்தியால், காலாஞ்ஜன ப்ரதிபடம் - கருத்த மையையொத்ததாயும், கந்தர்ப்ப தந்த்ர கலயா - காமசாஸ்திர ஞானத்தினால், கலிதானுபாவம் - உண்டாகும் பாவங்களோடு கூடியதும், கலுஷார்த்தி சோரம் - பாபத்தினாலுண்டாகும் கஷ்டங்களைப் போக்குவதுமான, தே கருணா கடாக்ஷம் - உனது கருணை நிறைந்த பார்வையை, மயி - என் விஷயத்தில், கல்லோலயஸ்வ - அலைமோதியிருப்பதுபோல் இருக்கச் செய்வாயாகவும்.

(79) காஞ்சிபுர விஹார ரஸிகையான காமாக்ஷியே ! கருப்புமைக்கு ஸமமாயும் அழகிய காமகலையுடன் ஸம்பந்தமுள்ளதும், பாபத்தைப்போக்குவதுமான உனது கருணாகடாக்ஷத்தை என்மீது பாயும்படி செய்வாயாக !

80 क्रान्तेन मन्मथमदेन विमोह्यमान-
स्वान्तेन चूततरुमूलगतस्य पुंसः ।
कान्तेन किंचिदवलोकय लोचनस्य
प्रान्तेन मां जननि काञ्चिपुरीविभूषे ॥

க்ராந்தேன மன்மத மதேன விமோஹ்யமான-
ஸ்வாந்தேன சூததருமூலகதஸ்ய பும்ஸ: |
காந்தேன கிஞ்சித் அவலோகய லோசனஸ்ய
ப்ராந்தேன மாம்ஜனனி காஞ்சிபுரீ விபூஷே ||

ஜனனி காஞ்சிபுரீ விபூஷே - தாயே! காஞ்சிபுரிக்கு அலங்காரமாயிருப்பவளே ! சூததரு மூலகதஸ்யபும்ஸ: - ஆம்ர மரத்தின் அடியிலிருக்கும் புருஷனுடைய (ஏகாம்பரநாதருடைய), க்ராந்தேன - சேர்க்கையினால் ஏற்பட்ட, மன்மத மதேன-காமவேகத்தி

ணுல், விமோஹபமான - ஸ்வாந்தன-மோஹமடைந்த மனதோடு கூடியதும், காந்தன - அழகுள்ளதுமான, லோசனஸ்ய ப்ராந்தேன - (உனது) கடைக்கண்ணுல், மாம் - என்னை, கிஞ்சித் அவலோகய - கொஞ்சம் பார்ப்பாயாகவும்.

(80) காஞ்சி புரத்திற்கு அழகைக்கொடுக்கும் காமாக்ஷியே ஆம்ரவிருக்ஷத்தின் அடியில் வஸிப்பவரான ஏகாம்ரநாதனுடைய சேர்க்கையால் ஏற்பட்ட காமவேகத்திலை மோஹமடைந்த மனதோடு கூடிய அழகிய உனது கடைக்கண்ணுல் என்னை சிறிது கடாக்ஷிப்பாயாக.

81 कामाक्षि केऽपि सुजनास्त्वदपाङ्गसंगे
कण्ठेन कन्दलितकालिमसंप्रदायाः ।
उत्तंसकल्पितचकोरकुटुम्बपोषा
नक्तंदिवप्रसवभूनयना भवन्ति ॥

காமாக்ஷி கேபி ஸுஜனாஸ்த்வதபாங்க ஸங்கே
கண்டேன கந்தளித காளிம ஸம்ப்ரதாயா: |
உத்தம்ஸகல்பித சகோர குடும்பபோஷா:
நக்தம்திவ ப்ரஸவபூ நயனு பவந்தி॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! கேபிஸுஜனு: - சில புண்யவான்கள் (ஸத்துக்கள்) த்வத் அபாங்கஸங்கே - உனது பார்வையின் ஸம்பந்தம் ஏற்படும்போது, கண்டேன - கழுத்திலுல் (கழுத்தில்), கந்தளிதகாளிம ஸம்ப்ரதாயா: - (கறுப்பு) நீல நிறமுடையவர்களாகவும், உத்தம்ஸ கல்பித - சிரோபூஷணமாக, சகோர குடும்ப போஷா: - சந்த்ரனை உடையவர்களாகவும், நக்தம் திவ-இரவு பகல்களை, ப்ரஸவபூ நயனு: - உண்டுபண்ணும் கண்களையுடையவர்களாகவும், பவந்தி - ஆகிருர்கள்.

(81) காமாக்ஷியே! சில புண்ய சீலர்கள், உனது கடாக்ஷப் பார்வையின் மஹிமையால், கழுத்தில் கருப்பு நிறத்தை தரிப்பவர்களாயும் (நீலகண்ட) சிரஸில் சகோர பக்ஷகனை சந்திரனை தரிப்பவர்களாயும் இரவு பகல்களை உண்டுபண்ணக்கூடிய கண்களை உடையவர்களாயுமாகிருர்கள். பரமசிவனுருப்யம் பெறுகிருர்கள்.

1. இதில் அம்பிகையின் கடாக்ஷத்தைப்பெற்ற பரமசிவனை வர்ணிக்கப்பட்டது. (அல்லது பக்தர்களுக்கு அம்பிகையின் கடாக்ஷம் ஏற்பட்டால் பரமசிவனோடு ஸாரூப்யம் ஏற்படுவதாகச் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.) பரமசிவனுக்குக் கழுத்தானது கருப்பு வர்ணமுடையதாயிருப்பதால் 'கண்டேன கந்தளித காளிம ஸம்பாதாய:' என்று சொல்லப்பட்டது. சந்த்ரனுடைய நிலவைத்தவிர வேறு யாதொன்றையும் சகோரபக்ஷியானது பானம் பண்ணுவதில்லையாதலால் சகோரத்தின் குடும்பத்தை போஷிப்பவனாக சந்த்ரனை சொல்லி, அவனை பரமசிவன் சிரோபூஷணமாக உடையவராதலால் அவரை 'உத்தம்ஸ கல்பித சகோர குடும்ப போஷ:' என்று சொல்லப்பட்டது.

2. பரமசிவன் அம்பிகை இவர்களை வர்ணிக்கும்போது அவர்களுடைய கண்கள் திறப்பதினால் பகல் உண்டாவதாகவும் மூடுவதினால் ராத்ரி உண்டாவதாகவும் சொல்வது வழக்கமாதலால் இங்கு பரமசிவனைப் பற்றி 'நக்தம் திவ ப்ரஸவபூ நயன:' என்று சொல்லப்பட்டது.

82 नीलोत्पलप्रसवकान्तिनिदर्शनेन
    कारुण्यविभ्रमजुषा तव वीक्षणेन ।
कामाक्षि कर्मजलधेः कलशीसुतेन
    पाशत्रयाद्वयममी परिमोचनीयाः ॥

நீலோத்பல ப்ரஸவ காந்தி நிதர்சனேன
    காருண்ய விப்ரமஜுஷா தவ வீக்ஷிதேன |
காமாக்ஷி கர்மஜலதே: கலசீஸுதேன
    பாசத்ரயாத் வயமமீ பரிமோசனீயா:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! நீலோத்பல ப்ரஸவ காந்தி - கருநெய்தல் புஷ்பத்தின் காந்திக்கு, நிதர்சனேன - ஸமமான காந்தியோடு கூடியதும், காருண்ய விப்ரமஜுஷா - காருண்யத்தின் அழகினால் விளங்குவதும், கர்மஜலதே: - கர்மாக்களாகிற ஸமுத்ரத்திற்கு, கலசீஸுதேன - அகஸ்த்யராயிருப்பதுமான,

தவ வீக்ஷிதேன - உனது பார்வையினால், அமீவயம் - இந்த நாங்கள், பாசத்ரயாத் - மூன்றுவிதமான பாசங்களிலிருந்தும், பரிமோசனீயா:- விடுவிக்கப்பட வேண்டியவர்களாய் இருக்கிறோம்.

(82) காமாக்ஷி! நீலோத்பல புஷ்பத்திற்கு ஸமமான காந்தியுடன் கூடியதும், காருண்யம் நிறைந்ததும், கர்மமாகிற ஸமுத்ரத்திற்கு அகஸ்தியர் போன்றதுமான உனது கடாக்ஷத்தினால் நாங்கள் மூன்று பாசங்களிலிருந்து விடுவிக்கப்படவேண்டும்.

1. அகஸ்த்யர் ஒரு ஸமயம் ஸமுத்ரத்தின் ஜலத்தைப் பானம் பண்ணியதாக நமது புராணங்களில் ஒரு வ்ருத்தாந்தம் உண்டு. அம்பிகையின் கடாக்ஷம் கிடைக்கப்பெற்றால் கர்மாக்களின் ஸம்பந்தம் ஒழிந்துவிடுவதால் அந்த கடாக்ஷத்தை கர்மாக்களாகிற ஸமுத்ரத்திற்கு அகஸ்த்யராயிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. மூன்றுவிதமான பாசங்களென்பவை (ஈஷணாத்ரயம்) புத்ரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை, இந்த லோகத்தை ஜயிப்பதற்காக புத்ரேஷணை, பித்ருலோகங்களை ஜயிப்பதற்கு ஸாதனமாயிருக்கும் கர்மாக்கள் செய்வதற்காக வித்தேஷணை, உபாஸனைகளால் அடையக்கூடியதற்கு ஸாதனமாயிருப்பது தேவலோகம். அதில் ஆசையோடு இருப்பது லோகேஷணை. இந்த மூன்று ஈஷணைகளுக்கு ஈஷணாத்ரயமென்று பெயர். (சிலர் இவற்றை புத்ரேஷணை, வித்தேஷணை, தாரேஷணை என்றும் சொல்வார்கள். மண், பெண், பொன் என்ற மூன்று என்றும் சிலர்கள் சொல்வார்கள்.) இந்த மூன்றுவிதமான பாசங்களிலிருந்தும் தன்னைப் போன்றவர்களை விடுவிக்கவேண்டுமென்று கவியானவர் வேண்டுகிறார்.

83 अत्यन्तचञ्चलमकृत्रिममञ्जनं किं
झंकारभङ्गिरहिता किमु भृङ्गमाला ।
धूमाङ्कुरः किमु हुताशनसंगहीनः
कामाक्षि नेत्ररुचि नीलिम कन्दली ते ॥

அத்யந்த சஞ்சலமக்ருத்ரிமமஞ்ஜனம் கிம்
ஜங்கார பங்கி ரஹிதா கிமு ப்ருங்கமாலா |
தூமாங்குர: கிமு ஹுதாசன ஸங்கஹீன:
காமாக்ஷி நேத்ரருசி நீலிம கந்தளீ தே ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தே - உனது, நேத்ரருசி - நேத்ரங்களின் காந்தியான, நீலிம கந்தளீ - கருமையின் சேர்க்கையானது, அத்யந்த சஞ்சலம் - அதிகமான சஞ்சலத்தையுடையதும், அக்ருத்ரிம - பிறரால் செய்யப்படாத கூட்டப்படாத) அஞ்ஜனம் கிம் - மையா என்ன? (அல்லது) ஜங்கார பங்கி ரஹிதா - ஜங்கார சப்தத்தினால் பிரிவுபடாத, ப்ருங்கமாலா கிமு - வண்டுகளின் கூட்டமா என்ன? அல்லது) ஹுதாசன ஸங்கஹீன: - நெருப்பின் ஸம்பந்தமில்லாத, தூமாங்குர: கிமு-புகையா என்ன?

(83) காமாக்ஷி! உனது கடாக்ஷத்தின் கருமைநிறமானது, செயற்கையற்ற மை என்றோ, ஜங்கார சப்தமில்லாத வண்டுகளின் வரிசையென்றோ, அக்நி ஸம்பந்தமற்ற கருத்த புகை தாரையோவென்றோ நினைக்கக்கூடியதாயிருக்கிறது.

இதில் அம்பிகையினுடைய கடாக்ஷத்தின் கருப்பான காந்திக்கு ஸமமான வஸ்துக்களைச் சொல்லுகிறார். அந்த காந்தியானது அஞ்ஜனமோ வென்றால், அஞ்ஜனமானது ஒருவரால் கூட்டப்பட்டது, இருந்தபடியே இருக்கும். கடாக்ஷ காந்தியோ அத்யந்த சஞ்சலமானது, பிறரால் கூட்டப்படாதது. வண்டுகளின் கூட்டமோ என்றால் ஜங்கார சபதத்தைக் காணோமே! புகைக் கொடியோ என்றால் அக்னியின் ஸம்பந்தத்தைக் காணோமே! ஆகவே, ஸாதாரணமாய் உபமானமாகச் சொல்லக்கூடிய அம் மூன்று வஸ்துக்களும் அம்பிகையின் கடாக்ஷ காந்திக்கு வாஸ்தவமாக உபமானமில்லையென்று கவியின் அபிப்பிராயம்.

84 कामाक्षि नित्यमयमञ्जलिरस्तु मुक्ति-
बीजाय विभ्रम मदोदयघूर्णिताय ।
कंदर्पदर्पपुनरुद्भव सिद्धिदाय
कल्याणदाय तव देवि दृगञ्चलाय ॥

காமாக்ஷி நித்யம் அயமஞ்ஜலிரஸ்து முக்தி-
பீஜாய விப்ரம மதோதய கூர்ணிதாய |
கந்தர்பப தர்ப்ப புனருத்பவ ஸித்திதாய
கல்யாணதாய தவ தேவி த்ருகஞ்சலாய ॥

காமாக்ஷி தேவி - ஹே காமாக்ஷி! தேவி! முக்திபீஜாய - மோக்ஷத்திற்கு வித்தாயிருப்பதும், விப்ரம மதோதய - அழகினுடைய மதமேற்படுவதினால், கூர்ணிதாய - சுழன்றுகொண்டிருப்பதும், கந்தர்ப்ப - மன்மதனுடைய, தர்ப்ப புனருத்பவ ஸித்திதாய - கெர்வமானது திரும்பவும் உண்டாகும்படி செய்ததும், கல்யாணதாய - மங்களத்தைக் கொடுப்பதுமான. தவ த்ருகஞ்சலாய - உனது கடைக் கண்ணுக்கு, அயம் அஞ்ஜலி: - இந்த (என்னுடைய) நமஸ்காரமானது, அஸ்து - இருக்கட்டும்.

(84) தேவி! காமாக்ஷியே! மோக்ஷத்திற்கு விதைபோன்றதும், அழகின் பெருக்கால் சுழன்று கொண்டிருப்பதும் மன்மதனின் சக்திக்கு மறுபிழைப்புக் கொடுப்பதாயும் மங்கள பிரதமாயுமுள்ள உனது கடைக்கண்ணுக்கு என்று இந்த அஞ்ஜலி இருக்கட்டும்.

1. மதமேற்பட்டால் கண்கள் சுழலுவதை பலுமரித்து அழகினுடைய மதமேற்பட்டதினால் கண்கள் சுழலுவதாக 'விப்ரம மதோதய கூர்ணிதாய' என்று சொன்னதினால் அம்பிகையின் நிகரில்லாத ஸௌந்தர்யமானது வர்ணிக்கப்பட்டது.

2. மன்மதனுடைய மறு பிறப்பானது அம்பிகையின் கடாக்ஷத்தினுடைய அனுக்ரஹத்தின் பேரில் உண்டானதால் 'கந்தர்ப்ப தர்ப்ப புனருத்பவஸித்திதாய' என்று இங்கு சொல்லப்பட்டது.

3. இருகைகளையும் கூப்பி வந்தனம் செய்வதற்கு அஞ்ஜலி யென்று பெயர்.

85 दर्पाङ्कुरो मकरकेतनविभ्रमाणां
निन्दाङ्कुरो विदलितोत्पलचातुरीणाम् ।
दीपाङ्कुरो भवतमिस्रकदम्बकानां
कामाक्षि पालयतु मां त्वदपाङ्गपातः ॥

தர்ப்பாங்குரோ மகரகேதன விப்ரமாணாம்
நிந்தாங்குரோ விதளிதோத்பல சாதுரீணாம்।
தீபாங்குரோ பவதமிஸ்ர கதம்பகாணாம்
காமாக்ஷி பாலயது மாம் த்வதபாங்கபாத:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! மகரகேதன - மன்மதனுடைய விப்ரமாணாம் - லீலைகளின், தர்ப்பாங்குர: - கர்வத்திற்குக் காரணமாயிருப்பதும், விதளிதோத்பல - மலர்ந்த நீலோத்பலங்களின், சாதுரீணாம் - அழகுகளுடைய, நிந்தாங்குர: - இகழ்ச்சிக்குக் காரணமாயிருப்பதும் பவதமிஸ்ர கதம்பகாணாம் - ஸம்ஸாரமாகிற இருள் கூட்டங்களுக்கு, தீபாங்குரோ - தீபச்சுடராகவுமிருக்கும், த்வத் அபாங்கபாத: - உனது கடைக்கண் பார்வையானது, மாம் பாலயது - என்னைக் காப்பாற்றட்டும்.

(85) காமாக்ஷியே! மன்மத லீலைகளுக்கு கர்வம் கொடுப்பதாயும், மலர்ந்த நீலோத்பல புஷ்பங்கள் சோபைக்கு இகழ்ச்சியை விளைவிப்பதாயும், ஸம்ஸார தாபமாகிற இருளுக்கு தீபம்போலிருப்பதாயுமுள்ள உனது கடைக்கண் பார்வையானது என்னைக் காப்பாற்றட்டும்.

1. மன்மதன் மீனக்கொடியோனுகையால் மகரகேதனன் என்று பெயர் ஏற்பட்டது. அவனுடைய ஆளுகையினால் அவனுக்கு உண்டாயிருக்கும் அம்பிகையின் கடாக்ஷானுக்ரஹம் காரணமானதால் தர்ப்பாங்குரமென்று சொல்லப்பட்டது.

2. மலர்ந்த நீலோத்பலங்களின் காந்தியையும் பழித்ததான காந்தியோடிருப்பதால் அம்பிகையின் கடாக்ஷத்தை நிந்தாங்குரமென்று சொல்லப்பட்டது.

3. இருளடைந்த ப்ரதேசத்தில் ஒரு தீபம் வந்தால் அந்த இருளெல்லாம் அகன்று விடுவதுபோல ஸம்ஸாரமாகிற பெருத்த இருள் கூட்டத்தை அம்பிகையின் கடாக்ஷமானது போக்கிவிடுவதால் தீபாங்குரமாகச் சொல்லப்பட்டது.

86 कैवल्यदिव्यमणिरोहणपर्वतेभ्यः
कारुण्यनिर्झरपयः कृतमज्जनेभ्यः ।
कामाक्षि किंकरितशंकरमानसेभ्यः
स्तेभ्यो नमोऽस्तु तव वीक्षणविभ्रमेभ्यः ॥

கைவல்ய திவ்ய மணிரோஹண பர்வதேப்ய:
காருண்ய நிர்ஜரபய: க்ருத மஜ்ஜனேப்ய: |
காமாக்ஷி கிங்கரித சங்கர மானஸேப்ய: |
தேப்யோ நமோ²ஸ்து தவ வீக்ஷண விப்ர
மேப்ய:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! கைவல்ய - கைவல்ய மோக்ஷ மென்ற, திவ்யமணி ரோஹண - உத்க்ருஷ்டமான ரத்னம் விளையும், பர்வதேப்ய:— பர்வதங்களாயிருப்பவைகளும், காருண்ய - கருணையாகிற, நிர்ஜர பய: - மலையருவியின் (அல்லது நீர்வீழ்ச்சியின்) ஜலத்தில், க்ருதமஜ்ஜனேப்ய: - முழுகியிருப்பவைகளும், கிங்கரித - தாஸனாகச் செய்யப்பட்ட, சங்கர மானஸேப்ய: - பரமசிவனுடைய மனதையுடையவைகளுமான, தேப்ய: - அந்த, தவ வீக்ஷண விப்ரமேப்ய:- உனது கடாக்ஷத்தின் விலாஸங்களுக்கு, நம: அஸ்து - நமஸ்காரமிருக்கட்டும்.

(86) காமாக்ஷி! மோக்ஷமாகிற திவ்யமணிகளுக்கு உத்பத்தி மலைகள் போன்றவைகளும், தயையாகிற மலையருவி ஜலத்தில் மூழ்கியவைகளும், சங்கரர் மனதை இழுக்கத்தக்கவைகளுமான கடாக்ஷ விலாஸங்களுக்கு நமஸ்காரம்.

87 अल्पीय एव नवमुत्पलमम्ब हीना
मीनस्य वा सरणिरम्बुरुहां च किं वा ।
दूरे मृगी ततसमञ्जसमञ्जनं वा
कामाक्षि वीक्षणरुचौ तव तर्कयामः ॥

அல்பீய ஏவ நவமுத்பலம் அம்பஹீனா
மீனஸ்ய வா ஸரணிரம்புருஹாம் ச கிம் வா |
தூரே ம்ருகீ ததஸமஞ்ஜஸம் அஞ்ஜனம் வா
காமாக்ஷி வீக்ஷணருசௌ தவ தர்க்கயாம:॥

அம்ப காமாக்ஷி - தாயே! ஹே காமாக்ஷி! தவ வீக்ஷணருசௌ - உனது கண்ணின் காந்திக்கு, நவம் உத்பலம் - புதிதான (அப்போது மலர்ந்த) நீலோத்பலமும், அல்பீய ஏவ - மிகவும்

அல்பம் தான். மீனஸ்ய ஸரணி: வா - அல்லது மீன்களின் கோர்வையும் (அதாவது, மீன்களும்) ஹீனு - குறைவுதான். அம்புருஹாம் ச (ஸரணி:) - தாமரை புஷ்பங்களும், கிம் வா - எம் மாத்திரம். ம்ருகீ - பெண்மானும் (அதாவது, பெண்மானுடைய கண்களும்) தூரே - வெகு தூரம். தத் அஞ்ஜனம் வா - அந்த மையும், அமஞ்ஜுலம் - சரியானதல்ல, (என்று) தர்க்கயாம:- என்னுகிறோம்.

(87) தாயே! காமாக்ஷி! உனது கடாக்ஷசோபையின் எதிரில் நீலோத்பல புஷ்பத்தை அல்பமாகவே நினைக்கிறோம். மீன்களின் வரிசையோ, தாமரைப்பூவோ, மான் கூட்டமோ, உயர்ந்தமையோ எல்லாம் தாழ்ந்தவைகளே.

88 मिश्रीभवद्गरलपङ्कलशंकरोरः
सीमाङ्गणे किमपि रिङ्खणमादधानः ।
हेलावधूतललित श्रवणोत्पलोऽसौ
कामाक्षि बाल इव राजति ते कटाक्षः ॥

மிச்ரீ பவத் கரள பங்கில சங்கரோர:—
ஸீமா ங்கணே கிமபி ரிங்கணமாததான: |
ஹேலாவதூத லலித ச்ரவணோத்பலோஸௌ
காமாக்ஷி பால இவ ராஜதி தே கடாக்ஷ: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! மிச்ரீ பவத் - கலந்ததாக இருக்கும், கரள பங்கில - (ஹாலாஹல) விஷத்தின் சேற்றோடு கூடிய சங்கரோர: ஸீமாங்கணே - பரமசிவனுடைய மார்பில், கிமபி - ஏதோ ஒரு (வர்ணிக்கவியலாத) விதமாய், ரிங்கணம் ஆததான: - தவழ்ந்து கொண்டிருப்பதும், ஹேலாவதூத - விளையாட்டாய் எறியப்பட்ட (தோற்கடிக்கப்பட்ட), லலிதச்ரவணோத்பல: - காதிலணிந்திருக்கும் அழகிய நீலோத்பலத்தோடு கூடியதுமான, அஸௌ தே கடாக்ஷ: - இந்த உனது கடாக்ஷமானது, பால இவ ராஜதி - குழந்தைபோல் விளங்குகிறது.

(88) ஹே! காமாக்ஷி! உனது கடாக்ஷமென்கிற குழந்தையானது, சங்கரனின் கழுத்து விஷக்கருப்புடன் கலந்து அவர்

மார்பில் தவிழ்ந்து விளையாடியும், அவர் காதில் வைத்துக்கொண்டிருக்கிற நீலோத்பல புஷ்பத்தைக் கீழே தள்ளியும் லீலைசெய்கிறது.

குழந்தைகள் அழுக்கான இடங்களென்று பார்க்காமல் எங்கும் தவழ்ந்துபோவதுபோல் அம்பிகையின் கடாக்ஷமாகிற பாலனானவன் ஹாலாஹல விஷத்தின் கலந்ததான காந்தியால் சேரோடு கூடியிருப்பதாகத் தோன்றும் பரமசிவனுடைய மார்பில் தவழ்ந்து கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. திரும்பவும், அந்தக் குழந்தையானது அலங்காரத்திற்காகக் காதிலணியப்பட்டிருக்கும் நீலோத்பலத்தை விளையாட்டாய் எறிந்துகொண்டிருப்பதாகச் சொல்வதினால் அந்த நீலோத்பலத்தின் அழகை விளையாட்டாக (அனுயாஸமாக) ஜயித்துவிட்டதாகச் சொல்லப்பட்டது.

89 प्रौढीकरोति विदुषां नवसूक्तिधाटी-
चूताटवीषु बुधकोकिललाल्यमानम् ।
माध्वीरसं परिमलं च निरर्गलं ते
कामाक्षि वीक्षणविलासवसन्तलक्ष्मीः ॥

ப்ரௌடீ கரோதி விதுஷாம் நவ ஸூக்திதாடீ
சூதாடவீஷு புதகோகில லால்யமானம் |
மாத்வீரஸம் பரிமளம் ச நிரர்களம் தே
காமாக்ஷி வீக்ஷண விலாஸ வஸந்த லக்ஷ்மீ:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி !, தே வீக்ஷண விலாஸ - உனது பார்வையின் அழகாகிற, வஸந்த லக்ஷ்மீ: - வஸந்தகால லக்ஷ்மியானது, விதுஷாம் - வித்வான்களுடைய, நவ ஸூக்திதாடீ - புதிதான வாக்குக்களின் போக்காகிற, சூதாடவீஷு - மாந்தோப்புக்களில் புதகோகில - வித்வான்களாகிற கோகிலங்களால், லால்யமானம் - மெச்சப்படுகிற, மாத்வீரஸம் - தேனையும், பரிமளம் ச - வாஸனையையும், நிரர்களம் - தங்குதடையில்லா ப்ரௌடீகரோதி - அதிகமாய் வெளிப்படுத்துகிறது.

(89) காமாக்ஷியே ! உனது கடாக்ஷவிலாஸமாகிற வஸந்தகால சோபையானது வித்வான்களுடைய புதிய வாக்ஜரீயாகிற மாந்தோப்பில், அறிவாளிகளாகிற குயில்களால் கொண்டாடப்

பட்டதும் மிருந்த வாஸனையுள்ளதுமான தேன் பெருக்கை தடையின்றி உண்டாக்குகிறது.

1. இதில் அம்பிகையினுடைய பார்வையின் அழகை வஸந்தகாலத்திய லக்ஷ்மிக்கு (அழகுக்கு) ஒப்பிடப்பட்டது. வஸந்தகாலத்தில் மாமரங்கள் ஏராளமாய் புஷ்பிக்கும். கோகிலங்கள் எப்போதும் ஆனந்தமாகப் பாடிக்கொண்டிருக்கும். புஷ்பங்கள் தேனைச்சொரியும். எங்கும் பரிமளம் நிறைந்திருக்கும். அந்த அம்சங்களெல்லாம் அம்பிகையின் கடாக்ஷத்திற்கு இருப்பதாக இங்கு வர்ணிக்கப்பட்டது.

2. மாத்வீ என்றால் தேனிலிருந்து உண்டாக்கப்படும் ஒரு விதமான சாராயத்திற்கு பெயர்.

90 कूलंकषं वितनुते करुणाम्बुवर्षी
सारस्वतं सुकृतिनः सुलभं प्रवाहम् ।
तुच्छीकरोति यमुनाम्बुतरङ्गभङ्गीं
कामाक्षि किं तव कटाक्षमहाम्बुवाहः ॥

கூலங்கஷம் விதனுதே கருணாம்புவர்ஷீ
ஸாரஸ்வதம் ஸுக்ருதின: ஸுலபம் [ப்ரவாஹம் |
துச்சீகரோதி யமுனாம்பு தரங்க பங்கீம்
காமாக்ஷி கிம் தவ கடாக்ஷ மஹாம்புவாஹ:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, கருணாம்புவர்ஷீ - கருணையாகிற ஜலத்தைப் பொழிகின்ற, தவ - உனது, கடாக்ஷ மஹாம்புவாஹ: - கடாக்ஷமாகிய மஹாமேகமானது, ஸுக்ருதின:- புண்யவான்களுடைய, ஸாரஸ்வதம் ப்ரவாஹம் - வாக்காகிற ப்ரவாஹத்தை, ஸுலபம் - ஸுலபமாக, கூலங்கஷம் விதனுதே - கரைபுரளச் செய்கிறது. (ஆனால்) யமுனாம்பு தரங்க பங்கீம் - யமுனாநதியின் அலைகளை, கிம் துச்சீ கரோதி - என் இழிப்படுத்துகிறது அவமானப்படுத்துகிறது.)

(90) காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற பெரியமேகமானது கருணையாகி ஜலத்தை வர்ஷித்து ஸுக்ருதிகளுடைய வாக்பிர

வாஹத்தை கரையேறி வழியும்படி செய்கிறது. யமுனை ஜலத்தின் அலை வரிசைகளை திரஸ்கரிக்கிறது.

மேகமானது எல்லா நதிகளுக்கும் ஸமமாக மழையை வர்ஷிக்குமே, உனது கடாக்ஷமாகிற மேகமானது ஏன் வித்யாஸமாக நடந்துகொள்கிறது என்று கவியானவர் கேட்கிறார். கவிகளுடைய வாக்குகளை அம்பிகையின் கடாக்ஷமானது கரைபுரண்டு ப்ரவஹிக்கும்படி செய்கிறது. ஆனால் யமுனா நதியின் ப்ரவாஹத்தை அது தனது காந்தியால் பழித்து துச்சமாகச் செய்கிறது.

91 जागर्ति देवि करुणाशुकसुन्दरी ते
ताटङ्करत्नरुचि दाडिमखण्डशोणे ।
कामाक्षि निर्भरकटाक्षमरीचि पुञ्ज-
माहेन्द्रनीलमणिपञ्जरमध्यभागे ॥

ஜாகர்த்தி தேவி கருணாசுக ஸுந்தரீ தே
தாடங்க ரத்நருசி தாடிம கண்டசோணே |
காமாக்ஷி நிர்பர கடாக்ஷ மரீசி புஞ்ஜ-
மாஹேந்த்ர நீல மணி பஞ்ஜர மத்யபாகே ||

தேவி காமாக்ஷி - தேவி! ஹே காமாக்ஷி!, தே - உனது, கருணா சுக ஸுந்தரீ - கருணையாகிற கிளியானது, தாடங்க ரத்நருசி - தாடங்கங்களிலுள்ள ரத்னங்களின் காந்தியாகிற, தாடிம கண்ட சோணே - மாதுளங்கனியின் துண்டத்தோடு சிகப்பாயிருக்கும், நிர்பர கடாக்ஷ - உனது பூர்ணமான கடாக்ஷத்தின், மரீசி புஞ்ஜ - காந்திகளுடைய கூட்டமாகிற, மாஹேந்த்ர நீல மணி - இந்த்ர நீல ரத்னத்தாலான, பஞ்ஜர மத்யபாகே - கூட்டின் மத்தியில், ஜாகர்த்தி - இருந்துகொண்டிருக்கிறது (விளையாடிக்கொண்டிருக்கிறது.

(91) தேவி! காமாக்ஷி! உனது கடாக்ஷமாகிற இந்திர நீலக் கல் கூண்டில் உனது கருணையாகிற பெண்கிளி ஜாக்ரதை யிருக்கிறது. அந்தக்கூண்டின் மத்தியில் உனது தாடங்கரத்னக் காந்தி விழுந்து கிளிக்கு ஆகாரமான மாதுளம்பழ சோபையைக் கொடுக்கிறது.

இதில் அம்பிகையின் கருணையை சுகஸுந்தரியாக (பெண் கிளியாக) வர்ணிக்கப்பட்டது. அது அம்பிகையின் கடாக்ஷத்திலுடைய காந்திகளாகிய இந்த்ர நீலமணிக்கூட்டிலிருக்கிறது. கிளிகளுக்கு மாதுளை முத்துக்களில் ப்ரியமதிகம். அதே மாதிரி இந்தக் கிளிக்கு அம்பிகையின் தாடங்கங்களிலுள்ள ரத்னங்களின் காந்திகளானவை மாதுளை முத்துக்கள்போலிருக்கின்றன. (ரத்னங்களைப் பொதுவாகச் சொல்லும்போது அவை சிகப்பு நிறமுடையவையென்று வர்ணிப்பது கவிகளின் ஸம்ப்ரதாயம்.)

92 कामाक्षि सत्कुवलयस्य सगोत्रभावा-
दाक्रामति श्रुतिमसौ तव दृष्टिपातः ।
किं च स्फुटं कुटिलतां प्रकटीकरोति
भ्रूवल्लीपरिचितस्य फलं किमेतत् ॥

காமாக்ஷி ஸத்குவலயஸ்ய ஸகோத்ரபாவாத்
ஆக்ராமதி ச்ருதிமஸௌ தவ த்ருஷ்டி
[பாத: |
கிம் ச ஸ்புடம் குடிலதாம் ப்ரகடீகரோதி
ப்ருவல்லரீ பரிசிதஸ்ய பலம் கிமேதத்॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, அஸௌ தவ த்ருஷ்டிபாத:- இந்த உனது பார்வையானது, ஸத்குவலயஸ்ய - நல்லதான (உத்தமமான) நீலோத்பலத்திலுடைய, ஸகோத்ரபாவாத் - உறவினால் (நட்பினால்), ச்ருதிம் ஆக்ராமதி - ச்ருதியை அடைகிறது. கிம் ச - இன்னும் (ஆயினும்), குடிலதாம் - குடிலமாயிருக்கும் (கோணலாயிருக்கும்) தன்மையை, ஸ்புடம் - செம்மையாக, ப்ரகடீகரோதி - வெளிப்படுத்துகிறது. ஏதத் - இதானது ப்ருவல்லரீ பரிசிதஸ்ய - புருவக்கொடியோடு ஸம்பந்தப்பட்டதின், பலம் கிம் - பலனு என்ன ?

(92) காமாக்ஷி! உனது கடாக்ஷமானது குவலய புஷ்பத்தின் விளைவுறத்தால், காதுப்பக்கம் போகிறது. அது புருவக்கொடி பரிசயத்தால் குடிலமாயுமிருக்கிறது.

அம்பிகையின் பார்வையானது ஸத்துக்களான குவலயங்களுடன் பழக்கமிருப்பதினால் ச்ருதியை (வேதமார்க்கத்தை) அடைந்து நல்ல (கோணல்) வழியிலிருக்கவேண்டுமே. அப்படியிருக்க கோணலான வழியில் (அதாவது, கோணலாக) இருக்கிறதே, இதற்குக் காரணமென்ன? ஒருவேளை கொடிபோலிருக்கும் புருவங்களின் ஸம்பந்தத்தால் (ஸ்னேஹத்தால்) இதற்கும் கௌடில்யம் கோணலாயிருக்கும் ஸ்வபாவம் ஏற்பட்டிருக்கிறது போலும், என்று கவியானவர் வர்ணிக்கிறார்.

2. அதாவது, அம்பிகையின் கண்கள் ஸத்குவலயங்களுக்கு ஸமானமாயும், கர்ணாந்த விச்ராந்தமாகவும் இருப்பது இதில் வர்ணிக்கப்பட்டது.

3. அம்பிகையின் பார்வையானது ஸத்துக்களான குவலயங்களுக்கு உறவாயிருப்பதினால் ச்ருதி மார்க்கத்தை அனுசரித்திருந்தபோதிலும் குடில ஸ்வபாவமுடைய ப்ருவல்லரியின் பரிசயத்தினால் தானும் கௌடில்யத்தை வெளிக்காட்டுகிறது. கடாக்ஷமென்றால் கடைக்கண் பார்வையாகையால் கோணலாக ஸ்வபாவத்தோடிருப்பதாகச் சொல்லப்பட்டது.

93 एषा तवाक्षिसुषमा विषमायुधस्य
नाराचवर्षलहरी नगराजकन्ये ।
शङ्के करोति शतधा हृदि धैर्यमुद्रां
श्रीकामकोटि-यदसौ शिशिरांशुमौलेः ॥

ஏஷா தவாக்ஷிஸுஷமா விஷமாயுதஸ்ய
நாராசவர்ஷ லஹரீ நகராஜகன்யே |
சங்கே கரோதி சததா ஹ்ருதி தைர்யமுத்ராம்
ஸ்ரீ காமகோடி யதஸௌ சிசிராம்சு
[மௌளே:||

நகராஜகன்யே - பர்வத ராஜனாக ஹிமவானுடைய பெண்ணே! ஸ்ரீ காமகோடி - ஸ்ரீ காமகோடி! ஏஷா - இந்த, தவ அக்ஷி ஸுஷமா - உனது பார்வையின் ஸௌந்தர்யமானது, விஷமாயுதஸ்ய - மன்மதனுடைய, நாராசவர்ஷ லஹரீ - பாணங்களின்

பரம்பரை (என்று), சங்கே - ஸங்தேஹப்படுகிறேன், யத் - எந்தக் காரணத்தினுலென்றால், அவெளா - இந்தப் பார்வையானது, சிசிராம்சு மௌளேः - பரமசிவனுடைய, ஹ்ருதி - ஹ்ருதயத்திலிருக்கும், தைர்யமுத்ராம் - தைர்யத்தை, சததா கரோதி - நாசமாக (சக்குச்சக்காக) செய்துவிடுகிறது.

(93. பர்வத ராஜபுத்ரியான ஸ்ரீ காமகோடி! இந்த உனது கடாக்ஷரேகைபை மன்மதனுடைய நாராசபாண வரிசையாக நினைக்கிறேன். ஏனெனில் அது சந்த்ரமௌளியினுடைய தைர்ய முத்ரையை சக்குநூருகபிளக்கிறது.

1. நாராசமென்பது இரும்பாலான பாணங்களைக் குறிப்பதுடன் பொதுவாகவே பாணங்களைக் குறிக்கும்.

2. முத்ரையென்றால் சீல் போட்டிருப்பதற்குப் பெயர். பரமசிவனுடைய மனதானது தைர்யமாகிற முத்ரையுடனிருக்கிறது. அந்த முத்ரையை அம்பிகையின் கடாக்ஷங்களாகிற நாராசங்கள் உடைத்தெறிந்து அவருடைய மனதை ஜெயித்து விடுகிறதாகச் சொல்லப்பட்டது.

3. சந்திரனுடைய கிரணங்கள் (அம்சுக்கள்) குளிர்ச்சியுள்ளவைகளாக (சிசிரமாக) இருப்பதால் அவனுக்கு சிசிராம்சு வென்று பெயர். இதே காரணத்தால் அம்ருதாம்சு என்ற பாடாந்தரமு(ம்) உண்டு.

94 बाणेन पुष्पधनुषः परिकल्प्यमान
त्राणेन भक्तमनसां करुणाकरेण ।
कोणेन कोमलदृशस्तव कामकोटि
शोणेन शोषय शिवे मम शोकसिन्धुम् ॥

பாணேன புஷ்பதனுஷः பரிகல்ப்யமான
த்ராணேன பக்தமனஸாம் கருணாகரேண ।
கோணேன கோமளத்ருசஸ்தவ காமகோடி
சோணேன சோஷய சிவே மம சோக
[ஸிந்தும் ॥

காமகோடி - ஹே காமகோடி ! சிவே - மங்களத்தைச் செய்பவளே ! புஷ்பதனுஷ: - மன்மதனுடைய, பாணேன - பாணமாயிருப்பதும், பக்தமனஸாம்-பக்தர்களுடைய மனதுக்கு, பரிகல்பமானத்ராணேன - ரக்ஷணத்தைச் செய்வதும், கருணு கரேண - கருணை நிறைந்ததும், கோணேன - சிவந்ததாயுமிருக்கும், தவ கோமளத்ருச: கோணேன - உனது ம்ருதுவான கடாக்ஷத்தினுல், மம சோகஸிந்தும் - என்னுடைய துக்க ஸாகரத்தை, சோஷய - வற்றும்படிச் செய்வாயாகவும்.

(94) ஏ! சிவே! காமகோடி! மன்மதனுடைய பாணமாயும், பக்தர் மனதில் ரக்ஷண நம்பிக்கை செய்வதும், கருணைக்கு இடமாயுமுள்ள உனது அழகிய கடாக்ஷத்தின் ஓரத்தினுல் எனது சோகமாகிற ஸமுத்ரத்தை சோஷிக்கச் செய்வாயாக.

95 मारद्रुहा मुकुटसीमनि लाल्यमाने
मन्दाकिनीपयसि ते कुटिलं चरिष्णुः ।
कामाक्षि कोपरभसाद्वलमानमीन
संदेहमङ्कुरयति क्षणमक्षिपातः ॥

மாரத்ருஹா முகுடஸீமனி லால்யமானே
மந்தாகினீ பயஸி தே குடிலம் சரிஷ்ணு: |
காமாக்ஷி கோபரபஸாத் வலமான மீன
ஸந்தேஹம் அங்குரயதி க்ஷணமக்ஷிபாத: ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! மாரத்ருஹா - பரமசிவனுல், முகுடஸீமனி - சிரஸின்மீது, லால்யமானே - கௌரவிக்கப்படும், மந்தாகினீ பயஸி-கங்கையின் ஜலத்தில், கோபரபஸாத் - கோபத்தினுடைய படபடப்போடு, குடிலம் சரிஷ்ணு: - குடிலமாக ஸஞ்சரிக்கும், தே அக்ஷிபாத: - உனது பார்வையானது, வலமான மீன ஸந்தேஹம் - திரும்பித் திரும்பி ஓடிக்கொண்டிருக்கும் மீனே என்ற ஸந்தேஹத்தை, க்ஷணம் - ஒரு க்ஷணத்தில் (உடனே) அங்குரயதி - உண்டுபண்ணுகிறது (தோன்றச் செய்கிறது.)

(95) ஹே ! காமாக்ஷி ! உனது கடாக்ஷ பாதமானது, சிவனின் சிரஸில உள்ள கங்கையின் ஜலத்தின் மீது கோபத்தால்

அன்றுமின்றுமாக ஸஞ்சரிப்பதைப் பார்த்தால் மீன்களோவென்ற ஸந்தேஹத்தைக் கொடுக்கின்றன.

1. பரமசிவன் கங்கையை சிரஸில் தரித்திருக்கிறார். அவ்விதம் மற்றொரு ஸ்திரீயை பரமசிவன் சிரஸால் வஹித்து கௌரவிப்பதை அம்பிகையானவள் பார்த்து கோபம் கொள்வதால் அவளுடைய பார்வையானது கங்கையிடம் குடிலமாகச் செல்லுகிறது. அப்போது, நதி ஜலத்தில் ஸஞ்சரிக்கும் மீனோ இது என்று ஸந்தேஹமேற்படுவதாக கவியானவர் வர்ணிக்கிறார்.

2. அம்பிகையானவள் கங்கையை ஸபத்னியாக பாவிப்பதாயும் அந்தக் காரணத்தால் கங்கையிடம் கோபத்தோடு கூடிய பார்வையுடன் அம்பிகையிருப்பதாகவும் கவிகள் வர்ணிப்பது வழக்கம்.

'சிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜனே குத்ஸனபரா
ஸரோஷா கங்காயாம் கிரிசசரிதே விஸ்மயவதீ |'
(ஸௌந்தர்யலஹரீ)

96 कामाक्षि संवलितमौक्तिककुण्डलांशु
चञ्चत्सितश्रवण चामरचातुरीकः
स्तम्भे निरन्तरमपाङ्गमये भवत्या
बद्धश्चकास्ति मकरध्वजमत्तहस्ती ॥

காமாக்ஷி ஸம்வளித மௌக்திக குண்டலாம்சு-
சஞ்சத் ஸிதச்ரவண சாமர சாதுரீக: |
ஸ்தம்பே நிரந்தரம் அபாங்கமயே பவத்யா:
பத்தச்சகாஸ்தி மகரத்வஜ மத்தஹஸ்தீ ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி ! மகரத்வஜ மத்தஹஸ்தீ - மன்மதனென்ற மத்தகஜமானது, ஸம்வளித மௌக்திக - முத்துக்கள் இழைத்ததான, குண்டலாம்சு - (உனது) குண்டலங்களின் காந்தியினால் வெளுப்பாகத்தோன்றும், சஞ்சத்ஸிதச்ரவண சாமர சாதுரீக: - உனது காதுகளாகிற வெண்சாமரைகளை வீசிக்கொண்டு, பவத்யா: அபாங்கமயே - உனது கடாக்ஷமாகிற,

ஸ்தம்பே - ஸ்தம்பத்தில், நிரந்தரம் பத்த: - எப்போதும் கட்டப் பட்டதாய், சகாஸ்தி - விளங்கிக்கொண்டிருக்கிறது.

(96) காமாக்ஷி! காமனென்கிற மதம் பிடித்த யானையானது, உனது காதுக் குண்டல வெளுப்புக் காந்தியால் சாமரம் போடு வதுபோல் இருந்துகொண்டு உனது கடாக்ஷமாகிற கம்பத்தில் உன்னால் நிரந்தரமாகக் கட்டப்பட்டிருக்கிறதுபோல் தோன்று கிறது.

அம்பிகையின் குண்டலங்களிலிழைக்கப்பட்டிருக்கும் முத் துக்களின் காந்தியானது சுற்றிலும் அடிப்பதால் அம்பிகையின் காதுகள் வெண்சாமரைகள்போல் விளங்குகின்றன. இவற்றை மன்மதனென்கிற மத்தகஜமானது வீசிக்கொண்டிருக்கிறது. மேலும் அந்த கஜமானது அம்பிகையின் கடாக்ஷமாகிற ஸ்தம்பத்தில் எப்போதும் கட்டுண்டிருக்கிறது.

97 यावत्कटाक्षरजनीसमयागमस्ते
कामाक्षि तावदचिरान्नमतां नराणाम् ।
आविर्भवत्यमृतदीधितिबिम्बमम्ब
संविन्मयं हृदयपूर्वगिरीन्द्रशृङ्गे ॥

யாவத் கடாக்ஷ ரஜனீ ஸமயாகமஸ்தே
காமாக்ஷி தாவத் அசிரான்னமதாம் நராணாம்
ஆவிர்பவத் யம்ருததீதிதி பிம்பமம்ப
ஸம்வின்மயம் ஹ்ருதய பூர்வகிரீந்த்ர ச்ருங்கே

காமாக்ஷி அம்ப - ஹே காமாக்ஷி! தாயே! நமதாம் நரா ணாம் - (உன்னை) நமஸ்கரிக்கும் ஜனங்களுக்கு, யாவத் - எப் போது, தே கடாக்ஷ ரஜனீ ஸமயாகம:- உனது கடாக்ஷமா கிற ராத்திரிகாலமானது ஆரம்பமாகிறதோ, தாவத் - அப்போது அசிராத் - வெகு சீக்கிரத்தில், ஹ்ருதய பூர்வகிரீந்த்ர ச்ருங்கே, (அவர்களுடைய) ஹ்ருதயமாகிற உதய பர்வதத்தின் உச்சியில் ஸம்வின்மயம் - ஞானமயமான (ஞானமாகிற), அம்ருததீதிதி பிம்பம் - சந்திர பிம்பமானது, ஆவிர்பவதி - தோன்றுகிறது.

(97) தாயே! காமாக்ஷி! உனது கருப்பான கடாக்ஷமாகிற இரவு காலமானது ஏற்பட்ட உடனேயே மனிதர்களுக்கு ஞான மயமான சந்திரபிம்பமானது ஹிருதயமாகிற உதயமலையின் சிகரத்தில் தோன்றுகிறது.

1. அம்பிகையின் கடாக்ஷம் கிடைக்கப் பெற்றவுடன் பக்தர்களுக்கு ஞானோதயம் ஏற்படுகிறதென்பதை இதில் சொல்லப்பட்டது. அதற்கு, லோகத்தில் ராத்திரிகாலம் வர ஆரம்பமானவுடன் சந்திரன் உதயமாவது உபமானமாகச் சொல்லப்பட்டது. கடாக்ஷமானது கறுப்பு நிறமுடையதாகச் சொல்வது வழக்கமாகையால் அதை ராத்திரிகாலமாகச் சொல்வது பொருத்தமாக இருக்கிறது. மனதில் ஞானம் உண்டாவதை சந்திரன் உதயமாவதுபோலிருப்பதாகச் சொல்லப்படும். ஏனென்றால் சந்திரனைப்போல் அது மனதிலுள்ள அந்தகாரத்தைப் போக்குகிறது. ஆகையால் தான் ஞானமேற்படுவதை ஞானோதயமென்றும், சைதன்யசந்திரோதயமென்றும் சொல்வது வழக்கம்.

2. பூர்வகிரி என்பது கிழக்கிலுள்ள பர்வதம். ஸூர்ய சந்திரர்கள் கிழக்கில் உதயமாவதால் பூர்வகிரி என்றபதமானது உதயபர்வதத்தைக் குறிக்கும்.

98 कामाक्षि कल्पविटपीव भवत्कटाक्षो
दित्सुः समस्तविभवं नमतां नराणाम् ।
भृङ्गस्य नीलनलिनस्य च कान्तिसंप-
त्सर्वस्वमेव हरतीति परं विचित्रम् ॥

காமாக்ஷி கல்பவிடபீவ பவத் கடாக்ஷோ
தித்ஸு:ஸமஸ்த விபவம் நமதாம் நராணாம்
ப்ருங்கஸ்ய நீல நளினஸ்ய ச காந்திஸம்பத்
ஸர்வஸ்வமேவ ஹரதீதி பரம் விசித்ரம் ॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! நமதாம் நராணாம் - உன்னை நமஸ்கரிக்கும் ஜனங்களுக்கு, கல்பவிடபீவ - கல்பக வ்ருக்ஷம் போல், ஸமஸ்த விபவம்-ஸகலமான வைபவங்களையும், தித்ஸு:-

கொடுக்க விருப்பமுள்ள (கொடுக்கும்), பவத் கடாக்ஷ:- உனது கடாக்ஷமானது, ப்ருங்கஸ்ய - வண்டுவினுடையதும், நீலநளினஸ்ய ச - கருத்த தாமரை புஷ்பத்தினுடையவும், காந்தி ஸம்பத் ஸர்வஸ்வமேவ - காந்தியென்ற ஸம்பத்து முழுமையுமே, ஹரதி இதி - அபகரித்து விடுகிறது என்பது, பரம் விசித்திரம் - மிகுந்த ஆச்சர்யம்.

(98) காமாக்ஷிதேவி! உனது கடாக்ஷமானது கல்பக விருக்ஷம்போல் பக்தர்களுக்கு எல்லா விபவத்தையும் கொடுக்கிறது. ஆனால் அது, வண்டுகளுடையவும், நீலோத்பல புஷ்பங்களுடையவும், எல்லா ஸொத்துக்களையும் அபஹரிக்கிறதென்பது விசித்ரமாகும்.

1. நமஸ்கரிக்கும் பக்தர்களுக்கு ஸகல ஸௌபாக்யங்களையும் கல்பக வ்ருக்ஷம்போல் தாராளமாகக் கொடுக்கும் அம்பிகையின் கடாக்ஷமானது எளியதுகளான வண்டினுடையதும் நீலநளினத்தினுடையவும் காந்தியாகிற ஸம்பத்தை அபஹரிக்கிறதே இது என்ன ஆச்சர்யம், என்று கவியானவர் வர்ணிக்கிறார். அவைகளுக்கிருக்கும் ஒரே சொத்தான காந்தியை அதிலும் அதை ஜாடாவாய், இந்த கடாக்ஷமானது அபஹரிப்பானேன் என்றார்.

2. அம்பிகையின் கடாக்ஷத்தின் அனுக்ரஹமிருந்தால் ஸகல ஸௌபாக்யங்களும் கிடைக்குமென்றும், அம்பிகையின் கடாக்ஷமானது காந்தியில் வண்டுகளையும் நீல நளினங்களையும் பழித்ததானது என்பதும் இந்த வர்ணனையின் தாத்பர்யம்.

99 अज्ञात भक्तिरसमप्रसरद्विवेक
मत्यन्तगर्वमनधीत समस्तशास्त्रम् ।
अप्राप्तसत्यमसमीपगतं च मुक्तेः
कामाक्षि नैव तव काङ्क्षति दृष्टिपातः ॥

அக்ஞாத பக்திரஸம் அப்ரஸரத் விவேகம்
அத்யந்த கர்வம் அனதீத ஸமஸ்த சாஸ்த்ரம்।
அப்ராப்த ஸத்யம் அஸமீப கதம் ச முக்தே:
காமாக்ஷி நைவ தவ காங்க்ஷதி த்ருஷ்டிபாத:॥

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! அக்ஞாத பக்திரஸம் - பக்தியின் ரஸத்தை அறியாதவனும், அப்ராப்த விவேகம் - அறிவே இல்லாதவனும், அத்யந்த கர்வம் - அதிகமான கர்வத்தோடு கூடினவனும், அனதீத ஸமஸ்த சாஸ்த்ரம் - ஸகல சாஸ்த்ரங்களிலும் வாசிப்பில்லாதவனும், அப்ராப்த ஸத்யம் - ஸத்யத்தை அடையாதவனும் (ஸத்யமில்லாதவனும்), முக்தே: அஸமீப கதம்ச - மோக்ஷத்திற்கு வெகுதூரத்திலிருப்பவனுமான ஜனத்தை தவ த்ருஷ்டிபாத: - உனது பார்வையானது, நைவ காங்க்ஷதி - விரும்புவதேயில்லை.

(99) காமாக்ஷி! உனது கடாக்ஷமானது பக்திரஸமறியாதவனென்றோ, விவேகமற்றவனென்றோ, கர்விஷ்டனென்பதையோ சாஸ்திரம் கற்காதவனென்றோ, ஸத்யமில்லாதவனென்றோ, உன் ஸமீபம் வராதவனென்றோ ஒன்றையும் எதிர்பாராமலே அநுக்ரஹிக்கிறது.

1. அதாவது, அப்பேர்ப்பட்டவன் பேரில் அம்பிகையின் கடாக்ஷமானது விழுகிறதில்லையென்று சொல்லப்பட்டது. இதினுடைய தாத்பர்யமென்னவென்றால், அம்பிகையின் கடாக்ஷம் பட்டுவிட்டால் இங்கு எதெது இல்லையென்று சொல்லப்பட்டதோ அதெல்லாம் பக்தனுக்குக் கிடைத்துவிடும் என்பது. அவன் பக்திரஸமறிந்தவனும், விவேகியாயும், கர்வமே இல்லாதவனும், ஸகல சாஸ்த்ரங்களிலும் பண்டிதனும், ஸத்யவானும், முக்தியைக்கிட்டியவனும் ஆகிவிடுவான் என்பது தாத்பர்யம்.

2. கடைசி அடிக்கு

'காமாக்ஷி மாம் அவது தே கருணா கடாக்ஷ:॥'

என்ற பாடாந்தரம் உண்டு. [ஹே காமாக்ஷி! உனது கருணை நிறைந்த பார்வையானது என்னைக் காப்பாற்றட்டும், என்பது இதின் பொருள்.] அப்போது முதல் மூன்று அடிகளில் சொல்லப்பட்டவைகளெல்லாம் மாம் என்ற பதத்தைச் சார்ந்து கவியைக் குறிப்பதாக அர்த்தமாகும். திரும்பவும், முக்தே: என்ற பதத்திற்கு முக்திவரும், ச என்பதை மாம் என்பதுடன் சேர்த்தால் 'என்னையும் (என்னைக்கூட) உனது கருணா கடாக்ஷமானது காப்பாற்றட்டும்' என்று அர்த்தமேற்படும். அதாவது,

தான் எல்லா வகைகளிலும் கேவலமாயிருந்தபோதிலும் அம்பிகையின் கடாக்ஷமானது தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்பது கவியின் பிரார்த்தனை.

100 अत्यन्तशीतलमनर्गलकर्मपाक
काकोलहारि सुलभं सुमनोभिरेतत् ।
पीयूषमेव तव वीक्षणमम्ब किं तु
कामाक्षि नीलमिदमित्ययमेव भेदः ॥

அத்யந்த சீதளம் அனர்கள கர்மபாக
காகோலஹாரி ஸுலபம் ஸுமனோபிரேதத்।
பீயூஷமேவ தவ வீக்ஷணமம்ப கிம் து
காமாக்ஷி நீலமித மித்யயமேவ பேத:॥

அம்ப காமாக்ஷி - தாயே! ஹே காமாக்ஷி! அத்யந்த சீதளம் - மிகவும் குளிர்ந்ததாயும், அனர்கள கர்ம பாக - தடுக்க முடியாத (பாப) கர்மாக்களின் பலனென்பதான, காகோல ஹாரி - விஷத்தைப் போக்குவதாயும், ஸுமனோபி:- தேவர்களால் (பக்தர்களால்), ஸுலபம் - எளிதில் அடையக்கூடியதுமான, ஏதத் தவ வீக்ஷணம் - இந்த உனது பார்வையானது பீயூஷமேவ - அம்ருதம் தான். கிம் து - ஆனால், இதம் - இது (உனது கடாக்ஷமானது), நீலம் இதி - கருப்பாயிருக்கிறதென்று அயமேவ பேத:- இந்த ஒரு வித்யாஸம் தான்.

(100) காமாக்ஷியே! மிகவும் குளிர்ச்சியுள்ளதாயும், தடையற்ற விஷாக்னியை தடுப்பதும், பெரியோர்களுக்கு ஸுலபமாயுமிருக்கிற உனது கடாக்ஷத்தை அமிர்தமாகவே நினைக்கிறேன். ஆனால் அமிர்தம் வெளுப்பு, உன் கடாக்ஷம் கருப்பு இதுதான் பேதம்.

அம்ருதம் வெண்மை நிறம். அம்பிகையின் கடாக்ஷம் கருமை நிறம். இவ்விதமான வர்ணபேதம் ஒன்றைத் தவிர அம்பிகையின் கடாக்ஷத்திற்கும் அம்ருதத்திற்கும் வேறுயாதொரு வித்யாஸமுமில்லையென்பதைக் காரணங்களுடன் இதில் கவியானவர் சொல்லுகிறார். இரண்டும் அத்யந்தம் சீதள

மானவை. அம்ருதம் விஷத்தைப் போக்கும். கடாக்ஷமானது பாபகர்மாக்களிலிருந்து ஏற்படும் பலனென்பதான விஷத்தைப் போக்கும். ஸுமனஸென்றால் தேவதைகளென்றும் நல்ல மனதுடையவர்களென்றும் அர்த்தங்களுண்டு. அம்ருதம் தேவர்களுக்கு எளிதில் கிடைக்கக்கூடியது. கடாக்ஷமானது நல்ல மனதுடையவர்களுக்கு ஸுலபமாகக் கிடைக்கக்கூடியது. ஆகையால் கடாக்ஷமானது கருப்பாயிருக்கிறதென்று ஒரு வித்யாஸத்தைத் தவிர, அம்ருதம்தான் என்பது கவியின் ஸித்தாந்தம்.

101 पातेन लोचनरुचेस्तव कामकोटि
पोतेन पातकपयोधि भयातुराणाम् ।
पूतेन तेन नवकाञ्चनकुण्डलांशु
वीतेन शीतलय भूधरकन्यके माम् ॥

பாதேன லோசனருசேஸ்தவ காமகோடி
போதேன பாதக பயோதி பயாதுராணும் |
பூதேன தேன நவ காஞ்சன குண்டலாம்சு
வீதேன சீதளய பூதரகன்யகே மாம் ॥

காமகோடி - ஹே காமகோடி! பூதர கன்யகே - பர்வத புத்ரீ! பாதக பயோதி - பாபமாகிற ஸமுத்ரத்தினிடம், பயாதுராணும் - பயத்தினுல் பீடிக்கப்பட்டவர்களுடைய, போதேன - கப்பலாயிருப்பதும், பூதேன - பரிசுத்தமாயிருப்பதும், நவகாஞ்சன - புதியதான தங்கத்தில் செய்யப்பட்ட, குண்டலாம்சுவீதேன குண்டலங்களின் காந்தியோடிருப்பதுமான, தேன - அந்த, தவ - உனது, லோசனருசே: பாதேன - பார்வையால் (பார்வையை என் மீது படச்செய்வதால்) மாம் சீதளய - என்னைக் குளிரச்செய்வாயாகவும்.

(101) பர்வத புத்ரீ! காமகோடி பாபமாகிற ஸமுத்ரத்தைக் கண்டு பயந்தவர்களுக்கு ஓடம் போன்றதும், மிகவும் பரிசுத்தமானதும், புதிய ஸுவர்ண குண்டல காந்தியுடன் விளங்குவதுமான உனது கடாக்ஷ காந்தியின் பரவுதலால் என்னை குளிரும்படி செய்வாயாக.

பாபம் நிறைந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கும் ஜனங்களுக்கு அம்பிகையின் கடாக்ஷமானது அவர்களை பத்திரமாய்க் கரைசேர்க்கும் கப்பலாக 'பாதக பயோதி பயாதுராணாம் போத:' என்று வர்ணிக்கப்பட்டது.

கடாக்ஷ சதகம் முற்றிற்று.

